# சிவாஜி




## தலைவலியும் காய்ச்சலும்

கல்கத்தா துறைமுகத்தில் இறக்குமதியான காகித பேல்களை ஆறுமாத காலத்திற்கு டெலிவரி எடுத்துக்கொள்ளாமல் ஆறுலட்ச ரூபாய்க்கு மேல் டெமரேஜ் கொடுக்கப்பட்டது உண்மையா என்று டெல்லி சட்டசபையில் சென்னையைச்சேர்ந்த டி. டி. கிருஷ்ணமாச்சாரி கேட்டாராம். இது உண்மையானால் சர்க்காரின் நிர்வாகத்திற்கு இதைவிடப்பெரிய கேவலம் வேறொன்றுமில்லையென்றும் அவர் சுட்டிக் காட்டினாராம்.

இந்த மாபெரும் நஷ்டத்தை உண்டாக்கியவர் கல்கத்தா பேப்பர் கண்ட்ரோலரின் உதவி அதிகாரி ஒருவர். இந்தக் குற்றத்திற்காக அவரை இரண்டு மாதம் சஸ்பெண்டு செய்துவிட்டார்களாம் சர்க்கார். அத்துடன் இந்த அலட்சியத்திற்கு யார் காரணம் என்பதை விசாரித்தறிய ஒரு விசேஷ அதிகாரியை நியமித்திருக்கிறார்கள். பொறுப்பாளி இன்னார் என்று தெரிந்த பிறகு இந்த நஷ்டம் அவரிடம் வசூலிக்கப்படுமென்றும் மந்திரி உறுதி கூறியிருக்கிறார்.

சிகப்புநாடாத்தனத்தினால் ஏற்பட்ட இந்த நஷ்டம் சர்க்கார் பணப்பையைக் கடித்து விட்டதனால் அவர்களும் சிகப்புநாடா முறையிலே தகுந்த நடவடிக்கையெடுப்பார்களென்றும், கடைசியில் இந்த நஷ்டத்திற்கு பொறுப்பான பேர்வழி யாரென்றே சரியாகக் கண்டு பிடிக்க முடியவில்லையென்று வருத்தத்துடன் என்றைக்காவது ஒருநாள் மந்திரி பதில் கூறுவாரென்றும் நாம் எதிர் பார்க்கலாம். அப்படியே ஆசாமி இன்னார் என்று தெரிந்துவிட்டாலும் அவரிடம் ஆறுலட்ச ரூபாயை வசூலிக்க முடியுமாவென்பது ஒரு பிரச்னை. அவ்வளவு ரூபாய் அவரிடமிருந்தால் அரசாங்க உத்தியோகத்திற்கு ஏன் வந்திருக்கப் போகிறார். அவரிடமிருந்திருந்தால் அது வந்தவாசல் எது என்ற கேள்வியும் இருக்கிறது.

எப்படியோ நமது சரித்திரப்பிரசித்தி வாய்ந்த சிகப்புநாடாவின் பெருமை இதனால் நிலை நாட்டப்பட்டுவிட்டது. பொறுப்பின்மை வாய்ந்த அதிகாரிகளால் விளையும் தீமையை உணர சந்தர்ப்பம் ஏற்பட்டதுஒரு லாபம்தான். தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தானே தெரியும்?

இந்தமாதிரி அதிகாரிகளால் பொதுமக்கள் எவ்வளவு தொல்லைகளுக்குள்ளாயிருக்கிறார்கள் என்று கணக்கெடுக்க விசேஷ அதிகாரியை சர்க்கார் நியமிக்கப்போகிறார்களா? நியமித்தால்தான் என்ன பிரமாதமான சீர்திருத்தம் ஏற்பட்டுவிடப்போகிறது? எனக்கு ஒன்றும் நம்பிக்கையில்லை.

இந்த மாகாணத்தில் அச்சுக்கூடக்கண்ட்ரோல் இருக்கிறது. ஆனால் இது காகிதக் கண்ட்ரோல் உத்திரவின் ஒரு பகுதியில் பதுங்கியிருக்கிறது. மகாணத்தில் காகித உபயோகம் பற்றி ஒரு கட்டுப்பாடுமில்லை. ஆனால் அச்சுக்கூடங்களைப் புதிதாக ஆரம்பிக்கமட்டும் கண்ட்ரோல் காரணம் காகிதசப்ளை திருப்திகரமாக இல்லையாம்.

கடைகளில் எந்தக்காகிதம் வேண்டுமானாலும் தாராளமாகக் கிடைக்கிறது. அதை உபயோகிக்கவும் தடையில்லை. ஆனால் அச்சுக்கூடக்கண்ட்ரோலுக்கு அர்த்தம்தான் புரியவில்லை. அச்சு யந்திரங்கள் வாங்குவாரற்றுக் கிடக்கிறது. காகித ரகங்களும் அப்படித்தான். ஆனாலும் எதற்காக அச்சுக்கூடங்களை மட்டும் கெட்டியாகப்பூட்டி வைக்கிறார்களோ தெரியாது.

யந்திரங்களையெல்லாம் வாங்கி வைத்துக்கொண்டுதான் அனுமதிக்கு விண்ணப்பிக்க வேண்டும். அதன்மீது சரி என்றோ கிடையாதென்றோ கூறும் அதிகாரம் சர்க்காருக்கு. சரி என்றால் தீர்ந்தது. இல்லையென்று கூறிவிட்டால் இயந்திரங்களை வாங்கினவன் கதி என்ன ஆகும்? இதை சர்க்கார் சிந்திப்பதாக தெரியவில்லை.

மோட்டார் பஸ்களுக்கு அனுமதி வழங்கும் கதையும் இப்படித்தான். வண்டிகள் கைவசமில்லாமல் மனுச்செய்தால் அதைத்தள்ளி விடுவார்கள். வாங்கி வைத்துக்கொண்டால் உத்திரவு கிடைக்குமென்று உறுதியில்லை. லட்சக்கணக்கில் பணத்தைப்போட்டு வண்டிகளை வாங்கி நிறுத்திவிட்டு வருஷக் கணக்கில் போக்கு வரத்து போர்டு அங்கத்தினர் வாசல்களில் தவம்புரியும் பஸ் சொந்தக்காரர்களுக்கு கணக்கில்லை.

கண்ட்ரோல் வருவதும் கள்ளமார்க்கெட் ஏற்படுவதும் அதை ஒழிப்பதுமெல்லாம் இருக்கட்டும். சரியானபடி, திட்டமான கொள்கையுடனில்லாமல் பொது மக்களுக்கு வீண் தொல்லை கொடுக்கும் சிகப்புநாடாத்தனமும் கட்டுப்பாடுகளும் பரிசீலனை செய்யப்பட வேண்டாமா? யார் இதை அவர்களுக்கு எடுத்துக் கூறுவது?

### இதனுள்

வாழ்க்கைச் சித்திரம்:

# "மொட்டைக் கடித மஹாத்மியம்"

[தாண்டவன்]

பட்டணத்தில் படித்துக்கொண்டிருக்கும் பிள்ளையாண்டானிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. அதைப் பார்த்ததும் பெற்றவனுக்கு தலையைச் சுற்றுகிறது. கடிதத்தில் அடியில் கையெழுத்து "மொட்டை" என்று கொட்டை எழுத்துக்களில் போட்டிருக்கிறது. இதில் ஒன்றும் விபரீதம் இல்லை. அது பெற்றவன் வேண்டி வைத்த செல்வப் பெயர் தான். ஒரு வயதில் குல தெய்வத்துக்கு முடியை கொடுத்துவிட்டு, விளையாட்டாக "ஏ மொட்டை" என்று கூப்பிடப்போய், அது குடும்பத்தில் பட்டப் பெயராகிவிட்டது. பிள்ளையாண்டானின் திருநாமம் குலதெய்வ நாமம்... அருணஜடை ஆனால் அருணஜடை என்றால் குடும்ப சுற்றுவட்டாரத்தில் பெரும் பாலோருக்கு தெரியாது. பட்டப் பெயரை குறிப்பிட்டால்தான் தெரிய வரும். பெறறவனுக்கு எழுதின கடிதத்தில்கூட "தங்கள் அன்புள்ள அருணஜடை" என்று கையெழுத்துப்போட்டிருந்தால், சற்று தலையைச் சொறிந்துகொண்டு நிதானித்துப பார்த்துக்கொள்ள வேண்டியிருக்கும். பிரஸ்தாப கடிதத்தில் கையெழுத்து இருந்தது. அது "மொட்டை"யிடமிருந்து வந்த கடிதமேயன்றி கையெழுத்தில்லாத 'மொட்டைக் கடிதமில்லை. ஆனால் பிதாவின் தலையைச்சுற்ற வைத்து, அவன் தலையை சொறிய செய்தது கடிதத்தில் அடங்கிய விஷயம். 'மொட்டைத்தாதன் குட்டையில் விழுந்தான்' என்கிற ஸாங்கிரஹமான செய்தி. "தலைபோகிற ஆபத்து உடனே ரூ. நூறு அனுப்பவும்—மொட்டை" இதுதான் கடிதத்தின் அடக்கம், இந்த பிரஹிருதியின் வழியே இதுதான். பணம் வேண்டுமென்றால் ஏதாவது தவிர்க்கமுடியாத 'டிமாண்டு' இருப்பதாக கடிதம் வரும். "திருப்பதிக்கு ஸ்கூல் எக்ஸ்கர்ஷன் போகிறது. நான் போய்வர ரூ 25 வேண்டும். இன்ஸ்பெக்ஷன் வருகிறது நல்ல உடை இல்லை. வாங்கிக்கொள்ள ரூ. 30 வேணும் இது மாதிரி மாதம் தவறாமல் ஏதாவது அதிகப்படி டிமாண்டு கொடுத்துக் கொண்டிருப்பான். ஆனால் இந்தக் கடிதத்தில் விஷயம் இன்னது என்று சொல்லாமலேயே தலைபோகிற ஆபத்து" என்று எழுதியிருந்தால், பெற்றவன் தலையை ஏன் சுற்றாது. அதை ஏன் அவன் சொறியமாட்டான்?

கையெழுத்து உள்ள கடிதத்துக்கே இவ்வளவு காபுரா' என்றால் கையெழுத்து இல்லாத மொட்டை கடிதத்தைப்பற்றி கேழ்ப்பானேன். சில கையெழுத்தில்லாத கடிதங்கள் அவ்வளவு அர்த்த புஷ்டியானது அல்ல. உதாரணமாக, தபால் அவசரத்தில் கையெழுத்துப்போட மறந்துவிடலாம். எழுதியிருக்கும் ஆசாமியின் எழுத்திலிருந்து லிகிதகர்த்தாவைக் கண்டுகொள்ளலாம். 'அசடு' அவசரத்தில் கையெழுத்துக்கூட போட மறந்துவிட்டான்' என்று விஷயத்தை முடித்துவிடுகிறோம்.

லிகிதகர்த்தா இன்னார் என்று தெரியாமல் கையெழுத்து இல்லாமல் இருக்கும கடிதங்களைத்தான் மொட்டை கடிதங்கள் என்று தொன்றுதொட்டு வழங்கிவருகிறது. ஒரு கடிதம் மொட்டை கடிதமாக இருப்பதறகு நியாயம், விரோதம், லிகிதகர்த்தா தன்னை இன்னார் என்று வெளிப்படுத்திக்கொள்ள தைரியமில்லாமை. அதன் லக்ஷணம் வசைமாரி உருட்டல்மிரட்டல், அவதூறு, மொட்டைக்கடிதங்கள் புறப்படும் விஷயங்களில் மர்மம் விசேஷம். சில விரோதிகளிடமிருந்து கிளம்பும் சிலசுயங்கிருதானர்த்தமாக இருக்கும். தன்னைததானே பெரிய மனிதனாக வெளிப்படுத்திக் காட்டிக் கொள்ளச் செய்யும் பிரயத்தனங்களில் சுயங்கிருதா அனர்த்தமான மொட்டை கடிதங்கள் இன்றியமையாத ஆயுதம், உதாரணமாக ஒரு கட்சித் தலைவர் தன் கட்சியைப் பிரசாரம் செய்துகொண்டு சுறறுவதில் தன் கட்சி எவ்வளவு நியாயமானது என்பதை விட்டு விளாச வேண்டுமானால் சில மொட்டை கடிதங்கள் அதற்கு ரொம்ப அனுகூலமாக இருக்கும். கையாள் ஒருவனைவிட்டு பல ரகமான மொட்டை கடிதங்கள் சில (விரசமான பாஷைகள் உள்பட) எழுதிதரசசொல்லி அதை ஜேபில் வைத்துக்கொண்டுபோய் பிரசார மேடைமீதிருந்து அவிழ்த்து விடலாம். மேடையிலிருந்து பிரசங்கத்துக்கு இடையே சகோதரர்களே நண்பர்களே! என் கட்சி எவ்வளவு நியாயமன்று உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளக்கிக்காட்டியிருக்கிறேன். பத்திரிகைகளிலும் எழுதியிருக்கிறேன். இவ்வளவு நியாயமான கட்சியை வேறு நியாயமான எதிர்வாதத்தில் வெல்ல முடியாமல் உருட்டல் மிரட்டல் மூலம் குனிய வைத்துவிடலாம் என்று எண்ணும் பேதைகளும் நம் நாட்டில் இருக்கிறார்கள். பொழுது விடிந்தால் மொட்டைக் கடிதங்கள் எனக்கு வந்தவண்ணமாக இருக்கிறது. அவைகள் பெரும்பாலும் என் வாதங்களுக்கு சரியான பதில் ஒன்றும் சொல்லாமல், 'உம்முடைய துஷ்பிரசாரத்தை நிறுத்தாவிட்டால் உம்மை அது செய்துவிடுவோம் இது செய்துவிடுவோம் பாதரக்ஷை பிரயோகம் கர்தப பவனி என்றெல்லாம் பிதற்றி எழுதப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கெல்லாமா பயந்து என்னுடைய கட்சியைவிட்டு ஓடிவிடப்போகிறேன். கையில் சரக்கிருந்தால், மேடைக்கு வரட்டும். பத்திரிகை அரங்கில் வந்து பார்க்கட்டும் இந்த சிப்பாய்கள். இவ்வித அபூர்வ லிகிதங்களில் சில இன்று இந்த ஊரில் தபாலில் ஊர் தேடி வந்திருப்பது இதோ" என்று பையிலிருந்து எடுத்து படிக்கலாம். ஆனால் கூலிக்கு மாரடித்த பேர்வழிக்குமட்டும் எழுத்துக்கூலி சமர்த்தியாய் கொடுதது விடவேண்டும். இல்லாவிட்டால் அவன் மொட்டைகடித ஜனன மர்மம் தவிர இல்லாத விஷயங்களையும் எதிர் கட்சியில்போய் அவிழ்த்து விட்டுவிடுவான். சரியான கைக்கூலி கிடைக்காவிட்டால் அவன் எதிர் கட்சியில்போய் "கிடக்கிறான் வெத்து துப்பாக்கி. இவனை இந்திரன் என்றும் சந்திரன் என்றும் துதி பாடிக்கொண்டிருந்ததெல்லாம் வியர்த்தம். உழைத்த கூலி ஒழுங்காக கொடுக்காதவனு உலகத்தை உத்தாரணம் செய்துவிடப் போகிறான். இவனுக்காக எவ்வளவு மொட்டை கடிதங்கள் தயாரித்திருப்பேன். எவ்வளவு ஊர்களுக்கு பிரசங்க தேதிக்கு ஒரு நாள் முன்னதாகவே போய் அங்கு ஆள் அம்புகளைப்பிடித்து இவனுக்கு வரவேற்பு மேளதாளம், மெரவணை புஷ்பஹாரம் எல்லாம் தயாரித்திருப்பேன் (இதுதான் அதிகப்படி சரக்கு.) என்று பேசிக்கொண்டு கூடுவிட்டு கூடுபாய்ந்துவிடுவான்.

காதல் நாடகங்களுக்கும் மொட்டைக் கடிதங்களுக்கும் ரொம்ப தோஸ்தி! (அந்நியோந்யம்) காதல் நாடக ஒத்திகைகளில் மொட்டை கடிதங்கள் கைகோர்த்துக்கொண்டு அலையும் காக்ஷி கண்கொள்ளாக்காக்ஷி காதல் தோயும் மதுவானால் மொட்டைக் கடிதம் அதைவந்து பருகும் தும்பி. ஒன்று வீணையாகும் மற்றொன்று அதை மீட்டும் விரல்கள். ஒன்று பானமானால் மற்றொன்று அதை ஏந்தி நிற்கும் பாண்டம், காதல் தாரையானால் மொட்டை கடிதம் சந்திரன். ஒன்றுக்கொன்று இன்றி அமையாதது. காதலர்கள் கடிதம் எழுதிக்கொள்வதானால் பெரும்பாலும் கடிதங்கள் மொட்டைக் கடிதங்களே; கையெழுத்து இரா. அப்படியே கையெழுதது இருந்தாலும், உண்மையானது இல்லை. காதல் ஊடாடலில் பிறந்த 'புனைப்பெயர்'களாகவே இருக்கும். உதாரணமாக 'சுப்புத்தாயி' சுபத்ரையாகவும் 'அருணாசலம்', அர்ஜுனனாகவும் 'லக்ஷிமி' லைலாவாகவும் மஹாதேவன் மஜ்னுவாகவும் காதல்மணம் கமழும் மாறு பெயர்களில் கையெழுத்துகள் காணப்படும். உள் விஷயங்கள் என்னமோ ஒரே காதல் பாஷை தான்.

மொட்டை கடிதங்கள் இவ்வாறு காதலர்களுக்குள் நடமாடுவது தவிர காதல் நடிகர்களுக்கு அன்பர்களிடமிருந்து வரும் கடிதங்களும் மொட்டைக் கடிதங்கள்தான். அன்பர்கள் என்று குறிப்பிட்டது காதல் நாடகத்தைக் கண்டு சகிக்காத அண்டை அயலார்கள். காதலர்களுக்கு போய் வரும் மொட்டைக் கடிதங்கள் தவிர காதலர்க்ளுக்கு அயலார்களிடமிருந்து மொட்டை கடிதங்கள் வருவது அனுபவித்தவர்கள் சொல்லக்கூடும் அவ்விதம் அனுபவித்த ஒரு கதாநாயகர் அயலார் கடிதத்தைக் கண்டு கடிந்துகொள்வதிலும், அதற்காக தன் நெருங்கிய நண்பர்களையும் சந்தேகித்து அவர்கள் மீது பாய்ந்து விரோதிகள் வட்டத்தை விரிவாக்கிக் கொள்வதிலும் அர்த்தமேயில்லை. காதல் விஷயங்களில் ரஸிகர்கள் அதிகம் போட்டிகளும் சில இருக்கும். கதாநாயகனுக்கு நாடகம் நடிக்க இருக்கும் உரிமைரஸிகர்களுக்குஅக் கண்டிராவி காக்ஷியை தடுப்பதில் உண்டு போட்டிகளுக்கு தங்கள் பாத்யதைகளை ஊர்ஜிதப்படுத்திக்கொள்வதில் உண்டு. ஐம்பது வயதுதாண்டியபின், பேரன் பேத்தி எடுத்தபின் ஒரு பேர்வழி காதல் நாடக ராஜபார்ட்டு வேஷம் போட்டால், ரஸிகர்களிடமிருந்து மொட்டைக் கடிதங்கள் கிளம்புவதில் என்ன ஆச்சர்யம்? "ஏகிழட்டுப் பொணமே! சுடுகாட்டுக்கு போகும் தருவாயில்கூட உனக்கு பெண் பித்துதானா...... என்பது போன்றதும் "வேண்டாம் இந்த கேளி விலாசங்கள்—ஊர் சிறிக்க ஆரம்பித்திருக்கிறது—மானங் கெட்டுப்போய் விடாதே— என்பது போன்றும் கடிதங்கள் கிளம்பத்தான் செய்யும். அந்த நாடகத்திலேயே இந்த வயோதிக வாலிபன் சுற்றிக் கொண்டு அலையும் ஒரு பொதுவுடமையை மற்றொரு யதார்த்த வாலிபன் கண்போட்டு கண்ணி வைத்துக்கொண்டிருந்தால் "ஏ வழுக்கை மண்டை! ஜாக்கிரதை. நான் காதலித்துவரும் ஒரு பெண்மணியை நீயும் தாத்திக்கொண்டு அலைவதாக தெரிய வருகிறது. உன் பணம் எவ்வளவு தூரம் பாயும். காசும்போய் உன் காதும் போய் விடும்" என்று மொட்டையாக எழுதிவிடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். இதில் ஹாஸ்யமிருக்கிறது. எச்சரிக்கை செய்த பேர்வழி இன்னார் என்று தெரியாவிட்டால், வழுக்கை மண்டை வயோதிகன் யாரைக் கண்டு பயப்படுவது? அந்த பொதுவுடமையிடத்தில் மொட்டைக் கடிதம் எழுதிய வாலிபனுக்கு இருக்கும் பாத்தியதை வயோதிகனுக்கு எப்படி இல்லாமல் போய்விடும். கையெழுத்திட்டு கடிதம் எழுதி வாலிபத்தின் காரணமாக தன் பாத்தியதை முதன்மையானது என்று சாதித்துக்கொள்ளக் கூடாதா? ஆனால் கையெழுத்துப் போட்ட கடிதம், ஊரை சிரிக்க அடிக்க காத்துக்கொண்டிருக்கும் ரசிகர்கள் கையில் சிக்கிக்கொண்டால்! எனவே மொட்டைக் கடிதங்களில் மர்மம் தவிர அர்த்தபுஷ்டி சங்கிலிபோட்டு பிணைந்துகிடக்கும். இந்த இணைப்புதான் அதன் மஹாத்மியம்.

———

# சிவாஜி

ஆசிரியர் :— திருலோக சீதாராம்

| கோட்டை | திருச்சி 2—4—50 | முற்றுகை |
| --- | --- | --- |
| 15 | விரோதி-ஞு பங்குனி-மீ 20-வ | 18 |

**"சிவாஜி" சந்தா**
ஆண்டு 1-க்கு ரூ. 3—8—0
தனிப்பிரதி அணா 1
ஒரு வருஷத்திற்கு குறைந்த சந்தா கிடையாது.
மானேஜர் : "சிவாஜி"
தபால் பெட்டி நெ. 332
தெப்பகுளம் P. O.
திருச்சிராப்பள்ளி.


# உணவு முனையில் யுத்தப் பிரகடனம்

# புள்ளி விபரம் பயனில்லை

## திட்டமான வேலை வேண்டும்

உணவுப் பிரச்னை முனையில், நமது உணவு மந்திரி யுத்த பிரகடனம் செய்துவிட்டார். 1951—ம் வருஷத்திற்குமேல், வெளிநாடுகளிலிருந்து உணவுதான்ய இறக்குமதி நிறுத்தப்பட்டுவிடும் என்று பிரதமர் நேரு கண்டிப்பாய் அறிவித்துவிட்டார். கைத்தொழில் வளர்ச்சிக்கு உதவிகரமான யந்திரங்களை இறக்குமதி செய்யமுடியாதபடி, இந்த உணவுப் பிரச்னை வருஷாவருஷம் பலகோடி ரூபாய்களை விழுங்கி வருகிறது.

எதற்கெடுத்தாலும் 'வெள்ளைக்காரன்' மீது பழி போட்டுக் கொண்டிருக்கும் காலம் மாறிவிட்டது. உணவுப் பிரச்னை ஒரு முக்கியமான ஜீவாதாரமான பிரச்னை. இதில் செயலற்ற தன்மைக்கோ அல்லது பொறுப்பின்மைக்கோ இடமில்லை. இந்தப் பிரச்னையின் முக்கியத்துவத்தை எல்லாக் கோணங்களிலிருந்தும் பார்க்க வேண்டும். இதைத் தீர்ப்பதில் நம் ஒவ்வொருவருக்கும் பங்குண்டு என்ற உணர்ச்சி வேண்டும். பீதியை கிளப்பிவிட்டு தங்களுடைய உள்ளூர்ந்த அரசியல் நோக்கங்களைச் சாதித்துக் கொள்ள நினைப்பவர்களும் சரி, அல்லது தெளிவும்-திறனும் இல்லாது பொறுப்பில்லாமல் பேசிக்கொண்டுமட்டும் இருந்து கொண்டு இந்தப் பிரச்னையை ஒரு பயங்கரமாக்கிவிடுகிறவர்களும் சரி-இந்த இரண்டு கோஷ்டியாருமே மக்களின் உணவுப் பிரச்னைக்கு அபாயமான எதிரிகளாகும்.

இந்தப் பிரச்னை சுமார் 10 ஆண்டுகளாக நம் நாட்டை பயமுறுத்திக் கொண்டிருக்கிறது. இதைத்தீர்க்க பல பல திட்டங்கள் வகுக்கப்பட்டன. "தீர்த்துவிடுவோம்" என்ற திடமான நம்பிக்கையும் அடிக்கடி தெரிவிக்கப்படுகிறது. ஆனால், பலன் என்ன தெரியுமா? **விஷம் போல ஏறிக்கொண்டிருக்கும் விலைகளும், குறைந்த உற்பத்தி-விநியோகமுமே!** குடிகாரனுக்குபார்க்கும் விளக்குத்தூண் போல, **உணவு மந்திரி காரியாலயம்** காட்டும் 'பிரமாத'மான புள்ளி விவரங்களையே நாம் பார்க்கிறோம். ஆனால், அவை நமக்கு வெளிச் சத்தைத்தான் காட்டவில்லை. இந்தப் புள்ளிவிவரச் சேகரிப்பை சர்க்கார் **உண்மையாக,** சிரத்தையுள்ளவர்களைக் கொண்டு அதற்கென சிருஷ்டிக்கப்படும்-**மக்களிடம் நெருங்கிய தொடர்புள்ள வகையில்**-தனியான இலாகாமூலம் தயாரிக்கும்வரை இன்றையபுள்ளி விவரங்கள்எல்லாமே ஒரு **'மோசடி'**என்றுதான் நான் தைரியமாகக் கூறுவேன்.

> கிராமக்கர்ணம் - தனது விருப்பு - வெறுப்பிற்கிணங்க தயாரிக்கும் சாகுபடி சம்பந்தமான புள்ளி விவரங்கள்தானே பார்லிமெண்டில உணவு மந்திரியின் 'ஆதார'மாக திகழ்கிறது. அழுக்குப்படாத 20வது நூற்றாண்டு நாகரீக - புத்தகப்படிப்புமட்டுமுள்ள பொருளாதார 'நிபுணர்'கள் தயாரிக்கும் வாழ்க்கைத்தர புள்ளி விவரங்கள்தானே சர்க்காரின் கொள்கை நிர்ணயத்துக்கு உதவி செய்கின்றன! நமது

தேசீய சர்க்கார் இதை இன்றுங்கூட உணர்ந்ததாகத் தெரியவில்லை! பழைய ஏகாதிபத்திய ஆட்சி காலத்துப் 'பெருச்சாளி' களின் தடபுடல்களையும்-(**தானியக் கொள்முதலிலிருந்து-சட்டம் அமைதியை நிலைநாட்டுவதுவரை**) பார்க்கும்போது இந்த எண்ணம் எனக்கு சரியென்றே தோன்றுகிறது.

சர்க்காரை குறைகூற வேண்டுமென்பதற்காக நான் இதை எழுதவில்லை. பிரச்னையின் ஆழத்தையோ அல்லது அபாயத்தையோ சர்க்கார் உணரவில்லை என்று நான் சொல்லவுமில்லை. ஆனால் சர்க்காரின் கொள்கையை நிறைவேற்றும் போக்கில் தென்படும் பல முரண்பாடுகளையும், அதன் விளைவுகளையுமே நான் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். பிரிவினையின் விளைவால் ஏற்பட்ட அகதிப் பிரச்னை-மழையின்மை, ஜனத்தொகை ஏற்றம்-போன்ற காரணங்களும் இந்த உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு கஷ்டத்தை கொடுக்கின்றன என்பதும் உண்மைதான். ஆனால், 'பட்டினி பொல்லாத காட்டுத்தீ. பசிவந்திட எல்லாம் பறந்து போகும்' என்ற ஒரு நிலைமை திரும்பத்திரும்ப அந்த காரணங்களையே சொல்லிக் கொண்டே செயலற்றுக் கிடக்கவும்கூடாது. செய்கின்ற காரியங்களைச் செம்மையாய் செய்யாமல், 'எல்லாம் தானாகவே சரியாய்விடும்' என்று பிரார்த்தனை செய்துகொண்டிருக்கவும் கூடாது. ஏனெனில், பசி பெரும் புரட்சியை கிளப்பிவிடும். அமைதியான முறையில், **"ராமராஜ்ய"**த்தை ஸ்தாபிப்பது என்ற எண்ணமும் மண்ணாய் விடும். எனவே, இந்தப் பிரச்னையைத் தீரத்துடன், **தயவுதாட்சண்யமின்றி ராணுவ ரீதியில் தீர்க்க** விட வேண்டும். உணவுக்கொள்கையின் ஒவ்வொரு அம்சத்தையும், தனித்தனியாகவும் அணுகி, ஆராய்ந்து **மக்கள் உணர்ச்சியுடன் - ஒத்துழைப்புடன்** நிறைவேற்றினாலொழிய, உணவுப்பிரச்னையைத் தீர்க்க முடியாது. கோடி கோடியாகப் பணத்தை செலவழிப்பதாலோ அல்லது பெருமளவில் மனித சக்தியை ஈடுபடுத்துவதாலோ இந்தப் பிரச்னையைத் தீர்த்துவிடமுடியாது. **ஊதாரிச் செலவும், மூளையில்லாத முரட்டு உழைப்பும் தரும் பலன்கள் கஷ்டமும் நஷ்டமுமே.**

**முக்கிய காரணங்கள்:-**

இந்தக் கஷ்டத்தின் முக்கிய காரணங்களை ஆராய்வோம்:-

1. யுத்த பீதியும், யுத்த சன்னதமும் இன்னும் நின்றபாடில்லை. பாதுகாப்புக்கென ஒவ்வொரு சர்க்காரும் தனது வருவாயில் கிட்டத்திட்ட முக்கால் பங்கைச் செலவழித்து வருகிறது.

(10-ம் பக்கம் பார்க்க)



# சிவாஜி தர்பார்

## கள்ளச்சந்தை வாழ்க!

## பார்லிமெண்டில் பல்லாண்டு

### தலைவலியும் காய்ச்சலும்

கருப்புச்சந்தை எப்படியாவது ஒழித்துக் கட்டிவிட வேண்டுமென்ற துடிதுடிப்போடு சென்ற வாரமெல்லாம் நமது தில்லி மாநகரின் பாராளு மன்றத்தில் காரசாரமான வாதப் பிரதி வாதங்கள் ரஸமாக நடைபெற்றிருக்கின்றன. ஒருவர் கள்ளச்சந்தைக்காரனைத் தூக்குப் போடவேண்டுமென்றார். கள்ளச்சந்தையைப்பற்றிய விளக்கம் உரைத்தார் மற்றவர். கள்ளச் சந்தை வாழ்கவென்று ஒருவர் பல்லாண்டு கூறிப் பரவசமடைந்தார்.

ஒரு வக்கீல் ஒரு வழக்கில் லட்சரூபாய் பீசு வாங்குவது மட்டும் கள்ள மார்கெட் அல்லவா? என்று கேட்டார் ஒருவர். அதாவது கொடுப்பவனுக்கு உள்ள சக்தியின் எல்லையைத் தாண்டி அவனைப்பிழிந்து பணம் கறப்பதும் கள்ளமார்க்கெட் தான் என்பது அவர் கருத்து. இந்த வகையில் பார்த்தால், வக்கீல்கள்தான கிடைப்பார்கள், டாக்டர்கள், சினிமா நடிகர்கள், படமுதலாளிகள், கோபால் ரெட்டியார்என்றெல்லாம் சொல்லிக்கொண்டே போகலாமல்லவா?

ஒன்றைக்கொடுப்பவனுடைய சக்தியைப்பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தால் அதைப் பெற்றுப் பயனடைய வேண்டியவன் கதி என்ன ஆகும் என்று ஒரு கேள்வி போட்டால் அதற்கும் சமாதானம் சொல்லித்தான் ஆகவேண்டும். ஒன்றைப் பெறவேண்டியவனுடைய தேவை எவ்வளவோ இருக்கும், அதற்கெல்லாம் கொடுப்பவன்தானு பிணை? பெறவேண்டியவனுடைய தேவையைவிட அதற்குரிய அவன் தகுதி—அதாவது உழைப்பு-இன்னும்விளக்கமாக-கொடுப்பவனுடைய தேவையைப் பெறுபவன் பூர்த்தி செய்யும் அளவுதான் அடிப்படையாக இருக்க முடியுமே யல்லாது வேறு ஒன்றும் பேச இடமில்லை. மற்றொரு ரகம் இருக்கிறது. பூர்த்தி செய்து கொள்ளும் தேவைக்கு உரிய விலையைக் கொடுக்க ஒருவனுக்கு சக்தி வேண்டாமா? இப்படி எவ்வளவு அடுக்கிக்கொண்டே போனாலும் முடிவாக ஒரே வழி தான் உண்டு.

1. கொடுப்பவனுக்கும் பெறுபவனுக்கும் தேவைகள் பூர்த்தியாக வேண்டும்.

இந்த அடிப்படையில் பொருளாதார தத்வம் இயங்குகிறது. ஆனால் இந்தத் தேவை இருக்கிறதே இதற்குத்தான் ஒரு அளவுகோல் இல்லை. ஏற்பட்டிருக்கிற சங்கடமெல்லாம் இதுதான். உழைப்பை அளவுகோலாக வைக்காமல் பொன்னை அடிப்படையான அளவுகோலாக்கினதில்தான் இந்த சங்கடம் அதிகமாகி விட்டது.

கள்ளமார்க்கெட் காரர்களின் தேவை எந்த அளவோ பாவம், யாரால் நிர்ணயிக்க முடியும்? காப்பிக்குச் சர்க்கரை இல்லாதவனுக்கும் கூழுக்கு உப்பில்லாதவனுக்கும் ஏற்படுகிற தேவைகளைப்பூர்த்தி செய்ய கள்ளமார்க்கெட் காரனுக்கு இருக்கிற தகுதி யிருக்கிறதே அதற்குத் தக்கப்படி அவனுக்குப் பணம் போய்ச்சேருகிறது. கள்ளமார்க்கெட்டில் போய் ஏழை பணக்காரன் என்று கொடுப்பவனுடைய அந்தஸ்துக்கு தக்கபடி விலை நிர்ணயிக்கும்படி கேட்க தர்ம சாஸ்திரத்தில் இடமிருக்கிறதா?

ஒரு சாமான் கிடைப்பது குதிரைக்கொம்பாக இருக்கிறதென்று எண்ணி கட்டுப்பாடுகளை சர்க்கார் ஏற்படுத்துகிறார்கள். அது புலிப்பாலாக இருந்தாலும் கொண்டு வந்து கொடுக்கிறேன் என்று சொல்லும் வீரனுக்கு அவன் கேட்கும் கூலியில் போய் பேரம் செய்தால் நடக்கிற காரியமா? அவனுக்கு மட்டும் அது கிடைக்கிறது. சர்க்காரால் ஜனங்களுக்குக் கொடுக்க முடியாது என்று அஞ்சி ரேஷன் செய்திருக்கும் சாமான் அவன் கிடங்கில்மட்டும் முடங்கிக் கொண்டிருக்க சாத்யமாகிறதென்றால் இதைவிட சர்க்காருக்கு சவால் வேறென்ன இருக்கமுடியும்?

யாரோ ஒருவனைக் கண்டு பிடித்து அவனுக்குத் தூக்குத் தண்டனை போட்டால்தான் என்ன? கிட்டங்கி உரிமை மற்றொருவனுக்குப் போய்விடுகிறது! இதனால் அந்தச் சரக்கு தேவையாகும் மற்றவர்க்கு என்ன லாபம்?

இதனால்தான் ஒருவர் பார்லிமெண்டில் பரமபக்தியுடன் எழுந்து நின்று பல்லாண்டு பாடினார் கள்ளச்சந்தைக் கருணாமூர்த்திகளுக்கு. நியாயந்தானே.

“கள்ளமார்க்கெட் காரர்களை எல்லோரும் கண்டிக்கிறார்கள். கள்ளமார்க்கெட் செய்பவர்களும் கூட அதில் சேர்ந்து கொண்டு “கள்ளமார்க்கெட் காரர்களை ஒழிக்கவேண்டும்” என்று காரசாரமாகப் பிரசங்கம் செய்கிறார்கள். ஆனால் கள்ளமார்கெட் காரர்களால் ஒரு நன்மை இருக்கிறது. கண்ட்ரோல் பொருள்கள் கிடைக்காமல் பொதுமக்கள் திண்டாடும் போது அவர்களுக்கு அதிக பட்ட விலையிலாவது சாமான்களை இவர்கள் எப்படியோ கொண்டு வந்து கொடுக்கிறார்களல்லவா? அவர்கள் சப்ளை செய்யாத சாமான் எது? யார் யாருக்கு எந்த சாமான் கொடுக்க வேண்டுமென்பது அவர்களுக்குத்தெரியும். கடைக்காரர்கள் எல்லாருக்கும் கொடுக்கும் அரிசியை மந்திரிகளுக்கும் கொடுத்தால் இப்போது மந்திரிமாரெல்லாம் படுத்த படுக்கையில்தான் இருப்பார்கள்”

இப்படி பேசியிருக்கிறார் அந்த அங்கத்தினர். கள்ளமார்க்கெட்டை அகற்றுவதற்கு தண்டனைகள் ஒன்றும் பெரும் வெற்றியைக் கொடுத்துவிட முடியாது. கண்ட்ரோலை எடுத்து விட்டால் கள்ளமார்க்கெட் தானே போய்விடும் என்பதுதான் அவர் பேசியதன் கருத்து.

கண்ட்ரோல் ஏற்பட்டால் கள்ளமார்க்கெட் அது போய் விட்டால் கொள்ளை மார்க்கெட் இதற்கு என்ன செய்வது என்ற கேள்வி ஏற்படத்தான் செய்யும்? சர்க்கார் குறுக்கேயில்லாமல், கொடுப்பவனையும் வாங்குபவனையும் பலாபலப் பரீட்சைக்கு விட்டுவிட்டால் ஒரு நாளாவது சமரஸம் ஏற்படலாமென்றே தோன்றுகிறது. பதுங்கியிருக்கும் சரக்குகள் பகிரங்கமாக வந்தால் அதன்மீது மயக்கம் ஒழிந்துபோகும் பாருங்கள்.

சிமிண்டு கிடைப்பது கஷ்டம், அதற்குப் பர்மிட் பெறவேண்டுமென்றவரையில் கள்ளமார்க்கெட் தாராளமாக வாழ்ந்து வந்தது. இப்போது சிமிண்டு சீப்படுகிறது சீந்துவாரே இல்லை. மலிந்தால் எதுவும் இப்படித்தான்.

பாத்திகட்டி வேலியிட்டுப் பின் அதற்குக் காவலென்று பேரும் இட்டு நீதமிலாக் கள்வர் நெறியாயிற்றப்பா என்று கூறுகிறார் பாரதி. கையை மூடிவைக்கும் வரையில்தான் திறக்க வேண்டுமென்ற ஆவலுக்கு இடமுண்டு.

ஒழுக்கம் இல்லாத சமூகக் குழப்பத்தில் சர்க்கார் கட்டுப்பாடுகள் ஓரளவு பயன் தருமென்பது உண்மைதான். ஆனால் அவையே ஒழுக்கக் கேட்டை உண்டாக்குமானால் என்ன பிரயோசனம்?

---





உலகிலேயே மிகப்பெரிய நூலகம் பிரிட்டனில்தான் இருக்கிறது. இதில் கிட்டத்தட்ட 30 கோடி புத்தகங்கள் இருக்கிறது. இவ்வளவையும், ஒரு கோடி இருபது லக்ஷம் வாசகர்களின் உதவியாலும் சர்க்கார் உதவியால் சேகரிக்கப்பட்டது. சிறுவர்கள் படிப்பதற்கான தனி அறையில் வாரத்திற்கு ஒருமுறை படிப்பதும், சுற்றிலும் மாணவர் கேட்பதுமான ஒரு காட்சி.

# அறவுரை

## பேபிகளின் பரதநாட்டியம்

நாட்டியக் கலையில் இன்று நம்மவர் காட்டும் வெறி உணர்ச்சியின் விபரீதங்களைப் பற்றி சமீபத்தில் "சிவாஜி" தலையங்கக் கட்டுரையில் எடுத்துக் காட்டப்பட்டிருந்தது. அருங்கலை விமரிசகரான இ. கிருஷ்ணையர் "ஹிந்துஸ்தான்" வாரப்பதிப்பில் எழுதியுள்ள கட்டுரை, சிறு குழந்தைகள் நாட்டியமாடுவதில் உள்ள தீமைகளை நன்கு விளக்குவதாக இருக்கிறது.

முதல் மனிதன் பிறந்த நாளிலிருந்து இன்றுவரை எவ்வளவோ அரிய அனுபவங்களைப் படைத்து வந்திருக்கிறது மனிதகுலம். எதிரே விரிந்து கிடக்கும் வியனுலகையும் வானத்து மீன்களையும் பார்த்துப் பார்த்து அடங்காத வியப்பில்—உடல் பசியால் ஏற்பட்ட வேதனைகளில் — இயங்கிச் செயல் புரியும் போது ஏற்படும் விளைவுகள் உள்ளத்தில் பதிகின்றன. செயல்கள் ஒன்று, இரண்டா? அனந்தம். அதேபோல் அவற்றின் விளைவுகளும் அனந்தம். எனவே நினைவில் பதிந்த செயல் விளைவுகளின் அனுபவமும் விரிவானது அந்த அனுபவங்களை வெளியிடுவதற்குப் பல வகைகளிலும் மனிதன் முயன்றதன்பயனாகத்தான் கலைகள் பிறந்திருக்கின்றன. ஏதோ ஒருகாலத்தில் யாரோ அடைந்த துயரம் அல்லது மகிழ்ச்சி அதை இன்னதென்று நமக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் உணர்த்தி நம்மையும் அதே உணர்ச்சியில் ஈடுபடுத்தி அனுபவத்தைப் பெறச்செய்கின்றன கலைகள். எனவே கலைஞன் தன் உணர்வில் புரிந்து கொண்ட அனுபவங்களை மற்றவருக்கும் பாய்ச்சுவதற்கான நுட்பமான சாதனமே கலையாகும்.

எனவே கலைகளின் இலக்கணத்தைப் பயின்று விட்டதனாலேயே அந்தக் கலையை விளக்க அல்லது புரிய முடியாது அனுபவ எக்களிப்பு வேண்டும்.

“பொதுவாகக் கலைகளே, இயற்கையையும், வாழ்க்கைத் தத்துவங்களையும் பச்சையாய்க் காட்டாமல் அழகுபடுத்திச் சித்தரித்து ரஸம் என்ற உயரிய சுவையை எழுப்புவதாகும். எந்தக் கலையையும் நன்கு கையாளுவதற்கு சுய அறிவும் அனுபவமும் அவசியமாகும். தமிழ் நாட்டில் சிறப்பாய் வளர்ந்து வந்திருக்கும் பரதநாட்டியம், நுட்பமான உள்ளெழுச்சிகளைத் தெளிவாகவும், அடக்கமாகவும், நாசுக்காயும் வெளிக்காட்டும் நாகரீகச் சமிக்ஞையே கலையாகும்.’’

என்று இ.கிருஷ்ணையர் குறிப்பிடுகிறார். அபிநய இலக்கணங்களைக்கிளிப்பிள்ளைப்பாடமாகத் தெரிந்து கொண்டு விட்டால் மட்டும் போதுமா? குறிப்பிட்ட உணர்ச்சிகளை அனுபவக் களிப்பிலிருந்து வெளியிடக்கூடிய வயதும் வேண்டும். பேபிகள் மேடையேறி அபூர்வமான அனுபவ வெளியீடுகளை அபிநயித்துவிட முடியாது என்று அவர் கூறுவது முற்றிலும் சரியானது.

கலையின் வெற்றியையோ அல்லது அதன் மேன்மையையோ பற்றிய வரையில், அபிநயக் கலைக்குச் சிறுபெண்கள்—இன்பச் சுவையை இன்னதென்று அரிய வயது வராத குழந்தைகள்—லாயக்கில்லை யென்றும் மெய்ப்பாடுகளை அனுபவித்து வெளியிடத்தக்க மலர்ந்து மணம் வீசும் பருவமங்கைகளே ஏற்றவர்கள் என்றும் அவர் கூறுவது மிகச்சரிதான். மேலும் வளர்ந்து வரும் பிஞ்சு உடலில் அபிநயக் கோளாறுகளால்உடல் வளர்ச்சி குன்றியும் கோணியும் போகக்கூடிய அபாயமிருக்கிறதென்று அவர் எடுத்துக்காட்டுவது கவனிக்கத்தக்கது.

சிறுபெண்ணா, மடமங்கையா, யாரால் அபிநயக்கலை சோபிக்கும் என்ற பிரச்னையைப் பற்றிய ஆராய்ச்சி வரையில் பருவமங்கைகளே பரதம் ஆடவேண்டுமென்ற தீர்ப்புச்சரிதான். யாராயிருந்தாலும் ஆடற்கலையினால சமூகத்தில் பரப்பப்படும் அழகுணர்ச்சி வெறும் காமக் களஞ்சியமாக இருக்கக் கூடாது என்பதுதான் சிவாஜி தலையங்கத்தில் வற்புறுத்தப்பட்டிருப்பது.

அழகாயிருப்பதனாலேயே அது நன்மையும் தருமென்று கூறமுடியாது. தங்கக்கத்தி என்றால் கழுத்தை வெட்டிக் கொள்ள முடியாதல்லவா?

இன்று நாட்டிய மேடைகளில் அபிநயிக்கப்படும் காட்சிகளும் அவை சுமந்துவரும் உணர்ச்சிகளும் 99 சதவிகிதம் ஆண் பெண் உடல் தினவைப் பற்றிய வேதனைகள் அல்லது பரவசங்களாகவே இருக்கின்றன. மடமங்கையர் ஆடட்டும். அபிநயப்பொருள்களில் இன்னும் எவ்வளவோ கவலையும் பொறுப்பும் செலுத்தப்பட வேண்டும் என்பதுதான் நான் கூற விரும்புவது. அபிநயத்தில் வெறும் சதைப்பசி தவிர வேறொன்றும் சித்தரிக்க இடமில்லை யென்று கருதுகிறார்களா? அல்லது பெரும்பாலோரைக் கவருவதற்கு சிருங்கார ரஸம் ஒன்றுதான் ஏற்றது என்பதனாலா? எதனால் நமது அபிநயப்பாடல்கள் பெரும்பாலும் காமச்சுவையுடைய பொருளை நிறைந்தவையாயிருக்கின்றன?

நாட்டியப் பாடல்களுக்கும் காட்சிகளுக்கும் புதுப்பொருள் காண்பதிலும் அவற்றை அபிநயிப்பதிலும் சிரத்தைக்காட்டினாலன்றிமடமங்கைகள் மேடைமீது ஆடுவதனால், எவ்வளவு உயர்ந்த அருங்கலையாக இருந்தாலும் சமூக ஒழுக்கம் நாட்டியக்கலையால் பாழாகிவிடுமென்பதுதான் உண்மை. இதே அச்சம் நமது முன்னோர்களுக்கும் இருந்திருக்க வேண்டுமென்றே தோன்றுகிறது. நமது பால் உணர்வின் பலஹீனங்களோடு இந்தக்கலையின் அருமையும் மேன்மையும் உறவாடிக்கெடுப்பதனால்தான் போலும்,இந்தக்கலையைப் பயில்வதற்கென்ற தனி வகுப்பையே அவர்கள் உண்டாக்கி வைத்தார்கள். நமது சமூகத்தில் ஏற்பட்டிருக்கும்விழிப்புணர்ச்சியினால் தேவதாசி குல ஏற்பாட்டையொழித்து அவர்களையெல்லாம் குடியும் குடித்தனமுமாக இருக்கச்செய்திருக்கிறோம். சட்டத்தின் துணையும் சீர்திருத்தக்காரர்களின் சேவையும் எவ்வளவோ இதற்குத்தேவைப் பட்டிருக்கிறது. இதன் மூலம் நாம் ஒழித்த தீமையை, நாட்டியக் கலையின் பேரால் வீடுதோறும் வருந்தியழைப்பது போல்தான் இருக்கும் நாட்டியக்கலையின் பொருளையும் பயனையும் இப்படியே விட்டுவைப்பதா?

கிருஷ்ணையர் கூறுவதுபோல “இந்தக்கலையைத் தொழிலாகக் கொண்டோ, ஆத்மார்த்தமாகவோ, பலவருஷங்களாக நீடித்து அழகுபட நிர்வகிக்க வேண்டுமானால், அதிலேயே கண்ணும் கருத்துமாய், விடாப்பழக்கமும், **நேரிய வாழ்வும்** பழுது படாத உடல் வளர்ச்சியும், **கல்வியறிவினாலான மனப்பண்பாடும்** கொண்டிருக்கவேண்டும்.”

பேபிகள் ஆடுவது நிற்க வேண்டும்.

மடமங்கைகள் ஆட்டத்தின் அபிநயக்கருத்துக்களில் சீர்திருத்தம் வேண்டும்.

இவை இரண்டும் உடனே கவனிக்கா விட்டால் பரதநாட்டியம் அழகான கருநாகம் என்பதனால் அதனை முத்தமிட முயல்வதுபோல் ஆகிவிடும்.

—“மந்தஹாஸன்”

சில புள்ளி விபரங்கள்

## மைசூர்—சென்னை கிராமங்கள் பரிவர்த்தனை

இந்திய யூனியனில் சமஸ்தானங்களெல்லாம் இணைந்து சாதாரண மாகாணங்களாகிவிட்டனவல்லவா? இதை யொட்டி நிர்வாக வசதிகளை முன்னிட்டு, சென்னை மைசூர் ராஜாங்கங்கள் தங்கள் எல்லையோரத்தில் உள்ள கிராமங்கள் பலவற்றை பரிவர்த்தனை செய்து கொண்டிருக்கின்றன.

மைசூர் 'பகுதியிலிருந்து சித்தலதுர்க்கம் ஜில்லா, மொலகல்முரு தாலுக்காவைச்சேர்ந்த 6 கிராமங்கள், கோலார் ஜில்லா பங்கார் பேட்டை தாலுக்காவின் 7 கிராமங்கள், அதே ஜில்லாவின் மாலூர் தாலுக்காவின் 1 கிராமம் மைசூர் ஜில்லா சாமராஜ நகர் தாலுகாவின் 1 கிராமம் ஆக 15 கிராமங்கள் சென்னை ராஜ்யத்தின் கீழ் வந்து விட்டது.

இதேபோல் சென்னையின் அனந்தபூர் ஜில்லா மதகாசிரா தாலுகாவிலிருந்து 16, சேலம் ஜில்லாவில் 19, தென் கன்னட ஜில்லாவின் கூண்டபுரி தாலுகாவிலிருந்து 32 ஆக 67 கிராமங்களை மைசூர் ராஜ்யத்திற்குக் கொடுத்திருக்கிறோம்.

### மைசூர் தியாகிகளுக்கு வீர மான்யம்

நமது மாகாணத்தில் சும்மா கிடந்த தியாகிகளுக்கு வீர மான்யம் தருவதாகக் கூறி சென்னை சர்க்கார் கொடுத்து வரும் தொந்தரவுகளைப் பற்றி நன்கு அறிந்திருக்கிறீர்களல்லவா? மைசூரில் என்ன நடந்திருக்கிறது தெரியுமா? அங்கே 1947 செப்டம்பர் அக்டோபர் மாதங்களில் நடைபெற்ற சத்யாக்ரஹப் போராட்டங்களில் அங்கஹீன மடைந்தவருக்கும் உயிரிழந்தோரின் குடும்பங்களுக்கும் பல்வேறு நிவாரணங்களை 1948-ல் மைசூர் அரசாங்கம் ஏற்பாடு செய்தது. 1942-ல் சரவணபெலகோலா கலவரங்களில் இப்படி அவதியுற்றோருக்கும் 1949 ஜனவரியில் சில நிவாரண உதவிகளைச் செய்திருக்கிறார்கள். 1942ல் இஸ்ஸூர் கலவரங்களில் பாதிக்கப்பட்ட தியாகிகள் விஷயமும் தனியாக பரிசீலனைசெய்யப்பட்டது: இவர்களை அவர்களின் தியாகத்திற்குத் தக்கவாறு பின்கண்டவாறு பிரித்திருக்கிறார்கள்.

1. தூக்குத் தண்டனை பெற்ற தியாகிகள் குடும்பங்கள்
2. சிறைவாசம் செய்தவர்கள்
3. மாணவ தியாகிகள்
4. சொத்து சுதந்திரங்களை முற்றும் பறிகொடுத்தோர்
5. ஓரளவு நஷ்டமடைந்தோர்.

இப்படி தியாகத்தை அளந்து பார்த்து தக்க பரிகாரம் தர மைசூர் அரசாங்கம் முடிவு செய்திருக்கிறதாம்.



அறவலி காத்துநாளும் அன்னையின் பணிக்கென்றே—நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி 2—4—50

# ஜில்லாச் சங்கடம்

சென்னை சட்டசபை மான்யக் கோரிக்கைகளில் மாகாணத்திலுள்ள பல்வேறு ஜில்லாக்களிலும் நடைபெறும் சர்க்கார் நிர்வாகம் பற்றிய விஷயங்களை விவாதித்திருக்கிறார்கள்.

ஜில்லாக்களில் சர்க்காரின் பிரதிநிதியாக இருந்து சகல காரியங்களிலும் தொடர்புகொண்டு நிர்வாக யந்திரத்தை நடத்துவது கலெக்டர்கள்தாம். இவர்களுடன் பொது மக்களுக்கு இருக்கும் தொடர்புதான் மாகாண சர்க்காரின் நிர்வாக வெற்றிக்கு அடிப்படை.

விவாதங்களில் குறிப்பாக அடிபட்ட விஷயம் கலெக்டர்களின் அதிகாரத்தில் வெளியார் தலையீடு இருக்கக்கூடாது என்பதுதான். விளக்கமாக சொன்னால் சட்டசபை அங்கத்தினர்கள் அடிக்கடி பல விஷயங்களிலும் தங்கள் செல்வாக்கை உபயோகிக்க முயல்கிறார்கள்; அதனால் ஒழுங்காக நிர்வாகம் புரியும் திறமையும் வசதியும் கலெக்டர்களுக்கு இல்லாமல்போகிறது என்பது பொருள்.

இதை மறுக்க வழியில்லை:சட்டசபை அங்கத்தினர்களில்கூட, ஆட்சிபீடத்திலிருக்கும் அரசியல் கட்சியைச்சேர்ந்த அங்கத்தினர்களின் செல்வாக்கினாலும் தலையீட்டினாலும் ஜில்லா நிர்வாகத்தில் பல காரியங்கள் கெட்டுப் போகின்றன என்பது உண்மை.

இதனால் சட்டசபை அங்கத்தினர்கள் கலெக்டர்களுடன் சம்பந்தப்படக்கூடாது என்று அறவே தடுத்துவிடுவது மிகவும் அபாயம். ஏனென்றால் சட்டசபை அங்கத்தினர்கள் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள். அவர்கள் அடிக்கடி பொதுமக்களுடன் நேரிடையே பழகி அவர்களுடைய துயரங்களை நன்கு அறிந்திருக்க வேண்டியவர்கள். இப்போது பதவியிலுள்ள நமது சட்டசபை அங்கத்தினர்கள் அனைவரும் இவ்வளவு சேவையுணர்ச்சியுடன் அல்லும் பகலும் உழைப்பவர்கள் தாம் என்று உறுதி கூறமுடியாவிட்டாலும் தத்துவம் என்னவோ அப்படித்தான். அவர்கள் மூலமாக தங்கள் குறைகளை அரசாங்கத்துக்குத் தெரிவிக்கவும் பரிகாரம் தேடிக்கொள்ளவும் மக்களுக்கு உரிமையிருக்க வேண்டும். இதையொட்டித்தான் பல்வேறு கழகங்களை அமைக்கும்போதும் சர்க்கார் சட்டசபை அங்கத்தினர்களுக்கும் அவற்றில் அங்கம் தருகிறார்கள்.

ஆயினும் அங்கத்தினர்கள் சிலரின் அடக்கமின்மையினால்தான் இந்த தொடர்பு தீமை விளைவிக்கிறது. தொடர்பு ஒன்றும் தவறில்லை. இத்தொடர்பு அதிகாரிகளை அச்சுறுத்துவதாக இருக்கக்கூடாது. பதவியிலிருக்கும் கட்சி அங்கத்தினர் மறைமுகமாகத் தங்களுக்கு எஜமானர்களாக இருப்பதை அதிகாரிகள் அறிந்திருக்கிறார்கள். தங்களை நடத்தும் மந்திரிகளின் வாழ்வும் தாழ்வும் இந்த அங்கத்தினர்களின் கையிலிருப்பதை அவர்கள் அறிவார்கள். எனவே தங்களுக்கு எதிராக சட்டசபை அங்கத்தினர் மந்திரிசபைவரைக்கும் போகாமலிருக்கவேண்டுமே என்றகவலை ஏற்படுவது இயற்கைதான்.

பதவியிலிருக்கும் மந்திரிகள் ஜில்லா நிர்வாகத்தில் சட்டசபை அங்கத்தினர்களுக்கு மட்டுமின்றி பல்வேறு வகுப்பிலிருந்தும் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு ஆலோசனை சபையை ஒவ்வொரு ஜில்லாவிலும் ஏற்படுத்தி, அதன் மூலமாக கலெக்டர்களை தொடர்புகொண்டு பொது மக்களுக்கு உதவி செய்யலாம்.

அதுமட்டுமல்ல, சட்டசபை அங்கத்தினர்களின் செல்வாக்கு அதிகாரிகளின் கடமைகளை நேர்மையுடன் செய்வதைக்கூட தடுக்கமுடியும் என்ற அச்சம் அதிகாரிகளுக்கு ஏற்படாமல் செய்யவேண்டுமேயன்றி, கலெக்டர்களுக்கும் சட்டசபை அங்கத்தினர்களுக்கும் உள்ள தொடர்பை அறுத்துவிடுவது கூடாது. நிர்வாக அதிகாரிகளின் பண்பிலும் பொறுப்பிலும் இரண்டு நூற்றாண்டுகளாக ஊறிப்போன சிகப்புநாடாத்தனமும் அதிகார உணர்ச்சியும் போகவேண்டியது அவசியம். அவர்களுடன் தொடர்புகொள்ளும் அங்கத்தினர்கள் அவர்களின் போக்கை உயர்த்தக்கூடிய அளவில் ஏற்பாடுகள் தேவை.

---

பொது அலுவலகங்களில் பொது மக்கள் நாளெல்லாம் சென்று பல விதமான காரியங்களை செய்துகொள்ளவேண்டியிருக்கிறது. ஆனால் எந்த காரியாலயத்திலும் வருகிறவர்கள் அமர்ந்திருந்து தங்கள் தருணம் வந்தவுடன் குறிப்பிட்ட அதிகாரியைச் சென்று பார்த்துப் பேசி வந்த வேலையை முடித்துக் கொண்டு திரும்ப, தனியான ஒரு கூடமோ உட்காரும் ஆசனங்களோ கிடையாது. அதிகாரியின் எதிரே, வந்து நிற்பவரை உட்காரச் சொல்லும் பண்பு அதிகாரிகளுக்கு அனேகமாக இல்லை. உட்கார ஆதனமும் இல்லை. சுதந்திரம் வந்தும்கூட பொதுமக்களுக்காகத்தான் அரசாங்கம் நடைபெறுகிறதென்ற உண்மையை அதிகாரிகள் தெரிந்துகொள்ளவில்லை.

கிராமத்து மக்கள்-படிப்பில்லாதவர்கள்-வந்தால் தேவையான தகவல்கள் தரவோ, உரிய அதிகாரியிடம் அழைத்துச் சென்று உதவி செய்யவோ தனியான ஆட்கள் இருக்கவேண்டியது அவசியமாகும். ரயில்வேக்களில் **"உங்களுக்கு உதவி செய்ய இதோ நான் காத்திருக்கிறேன்"** என்ற விளம்பரப் பலகையுடன் ஒருவர் உட்கார்ந்திருக்கிறாரே அந்தமாதிரி. கலெக்டர் தாசில்தார் போன்ற ரிவின்யூ இலாகா காரியாலயங்களில் உள்ள குமாஸ்தாக்கள் யுத்தத்திற்கு பின்பு ஏராளமான வேலைகளில் இடுப்பொடியக்கிடந்து வேலை செய்பவர்கள். அவர்களில் ஒவ்வொருவரிடமும் சென்று தனக்குரிய பேர்வழி யார் என்று தெரிந்துகொள்வதற்குள் கிராமவாசி மட்டுமென்ன, நகரவாசிக்குக்கூட பெரிய சாகஸம்தான். காரியாலய ஒழுங்குகளில்கூட மிகப் பெரும் மாறுதல்கள் செய்ய வேண்டியது அவசியமாகும்.

---

# நகரசபை அந்தோணியும் ரயில்வே ஷைலக்கும்

## திருச்சியில் தண்ணீர் கஷ்டம்

குடகு மலை பிறந்து, குறு குறு நடந்து, சிறுகை நீட்டி, காடு, மலை, வனம், வனந்தரங்களும் வயல்களும் சோலைகளும் துழாவி, அதிர நடந்து, ஆழ்கடல் கலந்து நாடெலாம் நீர் சுரக்கும் பொன்னி வளநாடு .....

இவ்வளவும் நமது சொந்தப் பெருமை. கரை வெளி என்று பெருமிதத்துடன் கூறி மகிழும் நமது சோழநாட்டில், திருச்சிமாநகரில் தண்ணீர்க் கஷ்டம் என்றால் தொலையில் இருக்கும் வாசகர்களுக்குக் கொஞ்சம்கூட விளங்காது.

உண்மையிலேயே இங்கே தண்ணீர் கஷ்டம். காவிரியில் வெள்ளம் பாய்வதில் குறைவில்லை. மேட்டூர்த் தேக்கத்தால் இங்கே நமக்கு நெஞ்சு உலர்ந்து போகவில்லை. நகரத்தின் நாடி நரம்புகள் போல் பாய்ந்தோடும் குழாய்களில்தான் தண்ணீர் இல்லை. வழிந்தோடும் தண்புனல் வடித்துவரும் குழாய்கள்வற்றிப் போயினவா? இல்லை இல்லை. இருக்கின்ற குழாய்கள் போதவில்லை. தேக்கி வைக்கும் தண்ணீர் நமக்குக் கிடைக்கவில்லை. இது என்ன மர்மம்?

ஒரு மர்மமுமில்லை. எல்லாம் வெள்ளிடை மலைதான். ஆனாலும் சொன்னால்தானே விளங்கும்.

திருச்சி நகரில் முன்னொரு காலத்தில் எழுபதினாயிரம் பேரே குடியிருந்தகாலத்துச் செய்தி இது. முதன் முதலில் குழாய்த் தண்ணீருக்கு ஏற்பாடு செய்தார்கள். அப்போது திருச்சி ரயில்வே ஜங்ஷனுக்கும் சேர்த்துத் தண்ணீர் கொடுக்கும் பொறுப்பை நகரசபை ஏற்றுக் கொண்டது.

3 லட்சம் பேருக்குமேல் மக்கள் பெருகிவிட்ட இந்நாளில் கூட பழைய திட்டத்தில் ஏற்பாடுசெய்த அளவு தண்ணீர் தான் கிடைக்கிறதென்றால் எப்படிப் போதுமானதாக இருக்கும்? அதுமட்டுமல்ல ரயில்வேக்காரர்களுக்கு தினசரி ஒரு லட்சம் காலன் தண்ணீர் கொடுப்பதாக முன்பு நமது நகரசபையார் செய்துகொண்ட ஒப்பந்தம் இன்னும் ரத்தாகவில்லை. அந்தக் காலத்தில் ரயில்வேக்குத் தனியாகத் தண்ணீர் வசதியில்லை. அச்சமயம் ஒப்பந்தம் செய்துகொண்டதும் அதன்படி பல்லாண்டுகள் நிறைவேற்றியதும் நியாயம்தான். பின்னாளில் ரயில்வே தனக்குச்சொந்தமாகத் தண்ணீர்வசதி செய்துகொண்டுவிட்டது. ஆனாலும் ஒப்பந்தப்படி நகரசபை தினசரி 1 லக்ஷம் காலன் தண்ணீர் கொடுத்தால்தான் ஆச்சு என்று முரண்டுபிடிக்கிறது. தேவையில்லாத விஷயம். ஆனாலும் வாட்டு ஜம்பத்தில் நகரசபையை நெருக்கி வருகிறார்கள் ரயில்வேக்காரர்கள். அந்த 1 லட்சம் காலன் மிஞ்சினால்கூட நமது நகருக்கு நிறையத் தண்ணீர் கிடைக்கும்.

போன வருஷம் ரயில் மந்திரி சந்தானம் வந்தபோது நகரசபைத் தலைவர் எட்வர்ட் பால் மதுரம் இதை எடுத்துக்கூறி பழைய ஒப்பந்தத்தை ரத்து செய்திடும்படி சொன்னார். கண்காட்சியை அச்சமயம் திறக்க வந்த டாக்டர் ராஜனிடம்கூடத் தான் தெரிவித்தார். ஆனால்

(அடுத்த பக்கம் பார்க்க)




# வெளியூர் பஸ்களுக்கு ஒரு நிலையம்

கடந்த வாரத்தில் நகர பஸ்ஸுக்காக ஒரு மத்திய நிலையம் ஏற்படுத்த வேண்டுமென்றும், அதை அமைக்க வேண்டிய முறையைப் பற்றியும் ஓரளவு எடுத்துரைத்தோம். நகர பஸ்ஸின் மத்திய நிலையம் எவ்வளவு அவசியமோ அதை விடப் பன்மடங்கு சீர்திருத்தங்கள் வெளியூர் செல்லும் பஸ்ஸுகளைப் பற்றி செய்யவேண்டியிருக்கிறது.

திருச்சி ஜில்லாவின் பெரும் பகுதி இடங்களுக்கு பஸ்ஸுகள்மூலம்தான் செல்லவேண்டியிருக்கிறது. ரயில்மூலம் வரும் பிரயாணிகளைவிட பஸ்ஸுகள் மூலம் வரும் பிரயாணிகள் தொகை மிகவும் அதிகம். வியாபார விஷயமாகவும், கோர்ட்டு அலுவலாகவும்தான் வருபவர்களே தவிர பொழுதுபோக்காக யாரும் வரக்கூடியவர்கள் அல்ல. வெளியூர் பஸ் பிரயாணிகளின் நிலையைக் கவனிப்போம்.

பெரும்பாலும் பஸ் பிரயாணிகள் படக்கூடிய கஷ்டங்கள் சொல்லத்தரமன்று. நகரிலிருந்து புறப்படும்பொழுதே பிரயாணி தனக்கு வேண்டிய டிக்கெட்டை பெற்று பஸ்ஸில் ஏறுவதற்குள், டிக்கட்டிற்காக, பஸ் கண்டக்டரிடமோ, அல்லது ஸ்டாண்டு டிக்கட் கலெக்டரிடமோ அவர்கள் படும் வேதனை மிகவும் கொடூரம். ஒழுங்காக நின்று டிக்கெட் பெறுவதற்குள்ள வசதிகள் கிடையாது. பஸ்ஸின் முன் பக்கமோ, பின்பக்கமோ, நடுரோட்டிலோ டிக்கட் கொடுப்பவர் நின்று டிக்கட்டை கொடுப்பதும், அவரைசுற்றி பிரயாணிகள் தவம் கிடந்து பல்லெல்லாம் தெரியக்காட்டி கெஞ்சுவதும், பிரயாணிகளை அவர் மதிக்காமல், அலட்சியப்படுத்தி பேசுவதும் ஒரு வேடிக்கையாக இருந்தாலும் எவ்வளவு வேதனைத் தரக்கூடிய விஷயம் என்பதை சிந்திக்க வேண்டும். இவ்வளவு தொல்லைகளுக்கிடையில் டிக்கட்டுகளைப் பெற்று பிரயாணம் செய்தால், குறிப்பிட்ட இடத்திற்கு பஸ் போய் சேருவதற்குள் இடையில் வரும் பிரயாணிகளை விடாமல் ஏற்றிக்கொண்டு, மூட்டைகளை அடுக்குவதைப்போல் அடுக்கிக்கொண்டு போகிறார்கள். இதைக் கண்டிக்க எந்த அதிகாரியும் இதுவரையில் அக்கரைகாட்டவில்லை. நடுவில் பல போலீஸ் ஸ்டேஷன்கள் இருந்தும் இதை கவனிக்காமல் இருப்பதில்தான் ஆச்சர்யம். பிரயாண நெருக்கடி அதிகரித்து வரும் நாளில் பஸ்ஸுகளை அதிகமாக்க அதிகாரிகள் முயற்சிக்காவிட்டாலும், புதிய பஸ்ஸுகளை வாங்கி வைத்துக்கொண்டு, வாங்கி நடத்துவதற்காக அரசாங்க அனுமதிக்கு மனுப்போட்டு காத்து நிற்பவர்களுக்கு பாரபட்சம் காட்டாமல் அனுமதியை வழங்கி ஒழுங்கான முறையில் நடத்தும்படி கண்காணித்து வர வேண்டிய பொறுப்பு அதிகாரிகளுக்கு உண்டு என்பதை எவரும் மறுக்கமுடியாது.

நமது நகரிலிருந்து வெளியூர் செல்லும் பஸ்ஸுகள் குறைந்தது நூற்றைம்பதுக்கு மேலாக இருக்கலாம். நமது நகரிலிருந்து எட்டுத்திக்குகளுக்குமேல், பல இடங்களுக்கு பஸ்ஸுகள் செல்லுகின்றன. ஓரிரு இடங்களைத் தவிர மற்ற இடங்களுக்குச் செல்ல ரயில் வசதி கிடையாது. எப்படியும் பஸ்ஸுகள் மூலம் தான் போகவேண்டும். இந்த பஸ்ஸுகள் புறப்படும் நிலையங்களும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இல்லை. மூலைக்கொன்றாக நிலையங்கள் இருப்பதும் அங்கிருந்து புறப்படுவதும்தான் வழக்கமாக இருந்து வருகிறது. இவ்விதம் மூலைக்கொரு நிலையமாக இருப்பதால் பிரயாணத்தாமதம் எவ்வளவு ஏற்படுகிறது என்றும், அதனால், பொருள் நஷ்டமும், கால தாமதமும் ஏற்படுகிறது என்பதை கவனித்தால் மிகவும் விசனிக்கதக்கதாக இருக்கும்.

மத்திய நிலயம் ஒன்று இருந்தால் பிரயாணிகள் தங்கள் பிரயாணத்தை வசதியாக நடத்த வழியுண்டு. தற்சமயம், பட்டர்வொர்த் ரோடில் உள்ள நிலையம் இடம்தராது. இப்பொழுதே அங்குள்ள நெருக்கடி மிகவும் அதிகம். அந்த நிலையத்தை அடுத்தார்போல் தேசீயக் கல்லூரியும், சாவித்திரி வித்தியா சாலை என்ற பெண்களின் பள்ளிக்கூடமும், இ. ஆர் ஹைஸ்கூலும் இருக்கிறது. பள்ளிச் செல்லும் மாணவர்களுக்கு அந்த நிலையத்தினால் உள்ள தொல்லைகளும் விபத்துக்களும் கணக்கில் அடங்கா. மேலும் அந்த நிலையத்திலிருந்து நாள் ஒன்றுக்கு குறைந்தது நூறுபஸ்ஸுகளாவது பல முறைவந்து திரும்பிச் செல்லவேண்டிய மத்திய நிலையமாக இருந்து வருகிறது. அந்த நிலையத்தில் பத்து பஸ்ஸுகள்கூட தங்கிச்செல்ல வசதி கிடையாது. பிரயாணிகள் தங்குவதற்கு போதுமான தங்குமிடமும் இல்லாததினால், பிரயாணிகளில் பெரும்பாலானவர்கள் தெருவிலும், பக்கத்திலும் எதிரிலும் உள்ள கடைகளில் தங்கள் மூட்டை முடிச்சுகளுடன் தங்கி, தெருவில் டிக்கெட் கொடுப்பவரிடம் நடைபாதைக்கு இடையூராக நின்று டிக்கட்டுகளை பெறுவதும், தெருவை அடைத்துக்கொண்டு நிற்கும் பஸ்ஸுகளில் ஏறுவதாக இருக்கிறதே தவிர, வசதியாக தங்கிச்செல்ல வழியில்லை. நகரத்திலுள்ள வீடுகளுக்கு முன் ஓடக்கூடிய சாக்கடைமூடி குறிப்பிட்ட அளவுக்கு சற்று பெரியதாக இருக்கும் காரணத்தினால் இடித்து தள்ளிவிட்டுப் போகும் நகரசபையார் பட்டர்வொர்த் பஸ் நிலையத்தினால் பொதுஜன நடமாட்டத்திற்கே ஆபத்து விளைவிக்கக்கூடிய நிலையிலிருப்பதை கவனித்தும் இதில் ஒரு சீர்திருத்தம் செய்யாமல் இருந்து வருவது மிகவும் கண்டிக்கத்தக்கதே. நிலயத்திற்கு வந்து புறப்படும் பஸ்ஸுகளுக்கு கட்டணத்தை வசூல் செய்பவர்கள், பஸ்ஸுகள் புறப்பட்டு செல்லக்கூடிய வசதிகள் இதுவரை செய்யவில்லை. பிரயாணிகள் தங்குவதற்கு போதுமான இடமும் கிடையாது. இருக்கும் சிறிய இடத்தை சுத்தமாக வைத்துக்கொடுக்க அதிகாரிகள் அக்கரை காட்டாமல், பிச்சைக்காரர்கள் விடுதியாக்கிவிட்டார்கள் என்பது தான் முற்றிலும் பொருந்தும். பஸ்ஸை திருப்பி எடுக்க டிரைவர்கள் படும் அவதி மிகவும் கொடுமை.

ஒரு மத்திய நிலையத்தை அமைக்க, போலீஸ் அதிகாரிகளும், நகரசபையாரும் முயற்சித்தால் பொதுஜன நடமாட்டத்திற்கு இடையூறுகள் இல்லாத நிலயத்தை அமைக்க நமது நகரில் இடம் இல்லாமல் போகவில்லை. மேலப்புலிவார்ட் ரோட்டில் ஏற்கனவே உள்ள பூங்கா (இப்ராஹீம் பார்க்) போதவில்லையென்ற காரணத்தாலோ, மற்றெந்த காரணத்தாலோ, மரக்கடைக்கு எதிரிலுள்ள இடத்தைஒரு புது பூங்காவாக மாற்றியமைத்த இடத்தை மத்திய பஸ் நிலயமாக மாற்றியிருந்திருக்கலாம் அந்த இடம் பொதுஜன நடமாட்டத்திற்கு அவ்வளவு இடையூறு விளைக்கக்கூடியதல்ல. மேலும் நகருக்கும் மத்திய இடமாகயிருககிறது. பூங்காவாக செய்தபிறகு இனி அதை மாற்றமுடியாது என நகரசபையார் கருதினால் கீழப்புலிவார்ட் ரோட்டில் உள்ள காலி இடததில் நகர பஸ்ஸுகளின் மத்திய நிலயத்திற்கு சென்றவாரம் தெரிவித்த ஆலோசனைகளின்படி, ஒருவெளியூர் பஸ்ஸுகளின் மத்திய நிலயத்தை நல்ல சுகாதார வசதிகளுடன் அமைத்து ஒரு வழிப்பாதையை அமைத்துக்கொடுத்தால் பொதுஜனங்கட்கு வசதியாக இருக்கும். இது விஷயத்தில் அதிகாரிகள் உடனடியாக அக்கரை செலுத்தினால் நமது நகர ஜில்லா முன்னேற்றத்திற்கு ஒரு படி என கொள்ளலாம்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

இதுவரை யார் காதிலும் அது விழுந்ததாகத் தெரியவில்லை.

இப்போது 20-3-50ல் நடைபெற்ற நகரசபைக் கூட்டத்தில் சேர்மனும் வைஸ் சேர்மெனும் ரயில்வே மானேஜரை சந்தித்துக் கேட்கலாமென்று முடிவு செய்திருக்கிறார்கள். சதையை ஒரு பவுண்டு அறுத்துக்கொடுத்தால்தான் ஆச்சு என்று பிடிவாதம் செய்த பெரிய கஞ்சப் பிரபு ஷைலக் போல் ரயில்வேக்காரர்கள் ஒப்பந்த வாசகத்தைப் பிடித்துக்கொண்டு தொங்குவதும், அகப்பட்டுக் கொண்டு விழித்த அந்தோணியைப்போல நமது நகரசபை திண்டாடுவதும் பரிதாபமாக இருக்கிறது. முன்பாவது ரயில்வே யாரோ கம்பெனிக்குச் சொந்தமாயிருந்தது. இப்போது அரசாங்க உடமையாகிவிட்ட ரயில்வே நகரசபையை நெருக்குவதும் எடுத்துச் சொல்லியும் கவனிக்காமல் இருப்பதும் வருந்தத்தக்கது. நகரசபையார் இதில் தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொண்டு ரயில்வேக்கு கொடுத்துவரும் லட்சம் காலன் தண்ணீரை மிச்சப்படுத்தி மக்களுக்கு வழங்குவார்களென்று எதிர்பார்க்கிறோம்.

---

# காளிதாஸனின் சாகுந்தலம்

தஞ்சை பெண்கள் கிறிஸ்தவ உயர்நிலைப்பள்ளி ஸம்ஸ்கிருத ஹிந்தி பண்டிதரும், 'வசந்தம்' 'கவிபாரதி' முதலிய புத்தகங்களின் ஆசிரியரும், எழுத்தாளரும், பத்திரிகை நிருபருமான ஸ்ரீ. சிரோமணி ஏ. எஸ். ரங்கநாதாச்சாரியார் 14-3-50 அன்று, திருச்சி ரேடியோ நிலயத்தில் நிகழ்த்திய பிரசங்கம். ஷை ரேடியோ நிலயத்தாரின் அனுமதியின் பேரில் வெளியிடப்படுகிறது. —(ஆசிரியர்)

ஸம்ஸ்கிருத இலக்கிய பூஞ்சோலையில் குயில்போல் கூவினான் மகாகவி காளிதாஸன். அவனது இனிய கூவுதல் இன்றும் உள்ளத்தில் களிப்பூட்டுகின்றது.

காவ்யம் இரண்டு வகைப்படும். கேழ்க்கத்தகுந்தவைகட்கு 'சிரவ்யகாவ்ய' மென்றும், பார்க்கத் தகுந்தவைகட்கு 'திருச்யகாவ்ய'மென்றும் பெயர். திருச்ய காவ்யங்கட்கு அதிக மதிப்பு. ஏனெனில் நாடகத்தைப் பார்க்கும் பொழுது அதனால் ஏற்படும் உணர்ச்சி மிகச் சக்தி வாய்ந்தது. காளிதாஸன் எழுதிய நாடகங்களில் தலைசிறந்தது சாகுந்தலம்.

பலதரப்பட்ட மக்களின். அன்றாட வாழ்வின் பல கோணங்களிலுமுள்ள இயற்கை எழுச்சியை படம்பிடித்து காட்டுகிறது **சாகுந்தலம்**. இதுவே இந்நாடகத்தின் தனிச்சிறப்பு. உலக பாஷைகளில் பெரும்பாலான மொழிகளில் இது மொழிபெயர்க்கப்பட்டிருப்பதற்கு இதுவே காரணம்.

## கதைப் போக்கு

துஷ்யந்தன் என்ற மன்னன் காட்டிற்குச் சென்று வேட்டையாடும் தருணத்தில் ஒரு மானைக் கண்டு விரட்டுகிறான். அதன்மீது அம்பெய்யும் தருணத்தில் "அரசே! ஆசிரமத்து மானது. கொல்லத் தகுந்ததல்ல" என்ற கோஷம் காதில் விழவே அரசன் அதைவிட்டுவிடுகின்றான். இவ்வாறு அரசனைத் தடுதத கண்வ முனிவரது சிஷ்யர்கள், சக்ரவர்த்தியாக வெல்ல ஒரு புதல்வன் பிறக்க வேண்டுமென ஆசீர்வதித்து. அதிதியாகிய அரசனை ஆசிரமத்துக்கு வருமாறு அழைத்து விட்டு செல்லுகின்றனர் அரசன், பரிவாரங்களை வெளியே விட்டுவிட்டு தான் மட்டிலும் ஆசிரமத்திற்குச் செல்லுகின்றான். மான் வேட்டையைவிட்ட இவனுக்கு மற்றொருமான் இலக்காகிறது. அந்த மான்தான் சகுந்தலை. சகுந்தலையும் அவளது தோழியரான ப்ரியமவதா, அனசூயா ஆகியோரும் ஆசிரமப் பூங்காவிலுள்ள செடிகளுக்கு நீர் ஊற்றுகின்றனர். அவ்வழியே சென்ற அரசன் ஒரு மரத்தின் மறைவில் நின்று அவர்களது சம்பாஷணையைக் கவனிக்கிறான். சகுந்தலையின் எழிலில் அவன் மயங்கி நிற்கிறான். அவள் தன்னால் மறைக்கத்தக்க க்ஷத்திரியப் பெண்ணாகத் தானிருக்கக்கூடும். இல்லையேல தன் மனம் அவள் மீது மோகிக்குமா? என்று அவனே நினைத்து ஆறுதலடைகின்றான். செடிகளில் நீர் ஊற்றும்பொழுது அதிலிருந்து மலரில் மதுவருந்திய தேன் வண்டின் வேலை தடைபடவே அது சகுந்தலையை விரட்டுகின்றது. அவள் தோழிகளை உதவிக்கு அழைக்கிறாள். "நாங்கள் யார் உன்னைக் காக்க? துஷ்யந்தனை அழை, அரசனால்தான் காடுகளும் காக்கப்படுகின்றன" என்று அவர்கள் அவளைக் கிண்டல் செய்கின்றனர். உள்ளே புகத்தருணத்தை எதிர்நோக்கி நின்ற துஷ்யந்தனுக்கு இது நல்ல வாய்ப்பாக அமைகிறது.

"புருவம்ச மன்னன் ஆட்சி நடத்துகையில் தவப் பெண்களிடம் அநீதியாக நடந்துகொள்பவர் யார்?" என்று கூறிக்கொண்டு அரசன் உள்ளே நுழைகின்றான் வண்டுதான துரத்தியது வேறொன்றுமில்லை, என்று நிலையை விளக்கிய தோழி கண்வமுனிவர் சோமதீர்த்தத்திற்குச் சென்றிருப்பதைக்கூறி. சகுந்தலையின் பிறப்பு முதலியவைகளை விளக்குகிறாள். சகுந்தலை விஸ்வாமித்ரரது புதல்வி, கண்வரால் வளர்க்கப்படுபவள் என்பதை அறிந்த அரசன் மிகவும் மகிழ்கிறான். தான் அரசன் என்று கூறினால் தன்னிடம் பேச சங்கோசப்படுவார்கள் என்ற காரணத்தால் புருவம்ச மன்னனால் ஆசிரமவாசிகளின் கிரியைகட்கு இடையூறின்றி காக்க நியமிக்கப்பட்டவன் என்பதாக தன்னை ஒருவாறாக அறிமுகஞ் செய்து கொள்ளுகின்றான். மாசற்ற விலங்குகளுடன் விலங்கு போல் வளர்ந்த சகுந்தலையின் மனதில் அரசனைக் கண்டதும் ஆசிரம நிலைக்கு முரணான ஒருவித உணர்ச்சி ஏற்பட்டு அவளை வாட்டியது. தோழிகளின் பலவித கிண்டல்கள் அவளது காதலுக்குத் தூபம் போட்டன. "துஷ்யந்தனது தேரைக் கண்டு மிரண்ட காட்டு யானை ஆசிரமத்தை பாழ்படுத்த விரைவதால் அனைவரும் ஜாக்கிரதையாக இருங்கள்" என்ற பயங்கரக் குரல் கேழ்க்கவே அரசன் யானையை அடக்க விரைகின்றான், அஞ்சிய பெண்கள் ஆசிரமம் செல்கின்றனர். இந்த அச்சம் கலந்த ஓட்டத்திலும் சகுந்தலை அரசனைத் திரும்பிப்பார்த்து மகிழ்ந்து செல்கிறாள். துஷ்யந்தன், தான் ஆசிரமத்தில் கண்ட சகுந்தலையின் எழிலைப் பற்றி விதூஷகனிடம் வர்ணிக்கின்றான். போதிய வசதியற்ற காட்டில் தங்க விருப்பமற்ற விதூஷகனுக்கு இதில் கவனம் செல்லவில்லை— அவன் நகரத்திற்குத் திரும்புவதையே பெரிதும் விரும்புகின்றான். துஷ்யந்தனோ சகுந்தலையிடம் அரும்பிய காதல் கனியும்வரை காட்டில் தங்க முடிவுசெய்துவிட்டான். நகரத்திலிருந்து வந்த தாயின் அழைப்பிற்கு மரியாதை செலுத்த விதூஷகனை நகரத்திற்கு அனுப்பிவிட்டு தான் மட்டிலும் தங்கிவிடுகிறான். விதூஷகன் ஒருக்கால் தான் சொல்லிய காதல் விஷயத்தைத் தனது அந்தப்புரத்தில் கூறிவிடப் போகிறானே என்றஞ்சி, நான் கூறியவை தமாஷ், உண்மையென்று கொள்ளாதே என்று அவனிடம் கூறி அனுப்புகின்றான்.

அரசனைக்கண்டது முதல் அவன் ஞாபகமாகவே வாடும் சகுந்தலை மாலினி ஆற்றின் கரையிலுள்ள கொடிமண்டபத்தில் தோழியருடன் அமர்ந்திருக்கையில், அவளைத் தேடிச் சென்ற அரசனும் அதே இடத்தை அடைகிறான். அரசனிடம் தான் கொண்டுள்ள அன்பைப் பற்றி விளக்கி சகுந்தலை அவனுக்கு எழுதிய கடிதத்தை தோழிகளுக்கு படித்துக்காட்டுகிறாள். அரசன் 'உன்னை வாட்டும் மன்மதன் என்னைக்கொளுத்துகிறான்' என்று கூறிக்கொண்டு உள்ளே செல்கின்றான். அவர்களைத் தனித்திருக்குமாறு செய்து ஜாடையாக வெளியேறுகின்றனர் தோழியர். காந்தர்வ மணம் பற்றி பேசி மகிழ்கின்றனர் அவர்கள். அச்சமும், கூச்சமும் காலத்தை கடத்திவிடுகிறது.

சகுந்தலையின் அத்தையான கௌதமி, மாலை நேரமாகிவிட்டதால் சகுந்தலையைத் தேடி வருகிறாள். கொடி மண்டபத்தின் அருகில் காவற்காத்துக்கொண்டிருந்த தோழியர் "சக்கரவாகப் பெண்ணே! இரவு வருகிறது. கணவனிடம் விடை பெற்றுக்கொள்" என்று, கௌதமியின் வருகையை மறைமுகமாகத் தெரிவிக்கின்றனர். 'சக்ரவாகம்' என்ற பறவைக்கு இரவில் கண் தெரியாது. அரசன் கொடிப்புதரில் மறைகிறான். கௌதமி அங்குவந்து சகுந்தலையை அழைக்கிறாள். துயரத்தை போக்கும் கொடிமண்டபமே மீண்டும் சுவைக்க வருகிறேன்— விடைபெறுகிறேன், என்று கூறி கொடிப்புதரில் மறைந்திருந்த அரசனிடம் விடைபெறுகிறாள். இப்பிரிவால் பெரிதும் வருந்தும் அரசன், வேள்விக்கு யாரோ இடையூறு செய்வதாக ஒலித்த குரலை கேட்டு உதவ ஓடுகிறான். பூங்காவில் பிரியம்வதையும். அனசூயையும பூஜைக்கு மலர் கொய்கின்றனர் பூஜைக்கு. துஷ்யந்தனும் சகுந்தலையும் காந்தர்வ மணம் செய்துகொண்டதுபற்றியும் சம்பாஷணைசெய்கின்றனர் கோபமே உருவாகிய துர்வாச முனிவர் இந்த சமயத்தில் ஆசிரமத்திற்கு அதிதியாக வருகிறார். துஷ்யந்தனையே நினைத்துக்கொண்டிருக்கும் சகுந்தலையின் கண்ணில் அவரது உருவம் தென்படவில்லை. துர்வாசர் மிகுந்த கோபமடைந்து, "யாரை நினைந்து எனது வருகையையும் நீ உணரவில்லையோ அவன் போதையிலுள்ளவனைப் போல் உனது நினைவை இழப்பான்" என்று சபித்துச் சென்றுவிடுகிறார். இக்குரல் தோழிகளது காதில் விழவே. அவர்கள் ஓடோடி வணங்கி சாபத்தை மாற்றுகின்றனர். 'அடையாளத்தைக் கண்டால் நினைப்பு வரும்'என்று கூறி முனிவர் மறைகிறார். 3 நாளில் சகுந்தலையை அழைத்துச் செல்ல ஆள் அனுப்புவதாகக் கூறிய துஷ்யந்தன் சாபத்தால் அனைத்தையும் மறந்துவிடுகின்றான். வெளியூர்சென்றிருந்த கண்வ முனிவர் வந்தார். வேதி மண்டபத்தில் 'அசரீரி' தோன்றி, சகுந்தலைகர்ப்பவதியென்றும், அவளுக்குப் பிறக்கும் குழந்தை உலகத்தை ஆளப் போகிறானென்றும் கூறுகிறது. கண்வமுனிவர் சகுந்தலையை ஆசீர்வதித்து 2. சிஷ்யர்களுடனும், கௌதமியுடனும் அரசனிடம அனுப்பி வைக்கின்றார். தபோதனர்களாகிய எங்கள் சக்தியையும், உனது உயர்ந்த மரபையும், பிறரை எதிர்பாராமல் தாங்களாகவே கூடிக்கொண்ட காதலின் தன்மையையும், உணர்ந்து அதற்கேற்றவாறு, உன் ராணிகளில் மதிக்கத்தக்க நிலையில் இவளை வைத்துக் கொள்வாயாக. பிற அதிர்ஷ்டவசமாக ஏற்படட்டும்பெண் வீட்டுக்காரர்கள் அதைப் பற்றிச் சொல்வது முறையல்ல" என்று அரசனுக்கு செய்திகூறி அனுப்புகிறார். சகுந்தலை நடந்துகொள்ளவேண்டிய முறையையும் அவளுக்கு உபதேசிக்கிறார். ஆசிரமத்தில வளர்ந்த செடி, கொடிகளிடமும், மான்களிடமும் விடைபெற்றுக்கிளம்புகிறாள் சகுந்தலை.

ஒருக்கால் அரசன் உன்னை உணராவிட்டால், அவரது பெயருடன் கூடிய மோதிரத்தைக்காட்டு' என்று தோழியர் சகுந்தலையிடம் தெரிவிக்கின்றனர். ;உங்கள் சந்தோஷம் எனக்குப் பயமூட்டுகின்றது' என்று சகுந்தலை கூறவே "அஞ்சவேண்டாம் உன்னிடத்திலுள்ள அன்பு மிகுதியே எங்கள் சந்தேகத்திற்கு காரண"மெனக் கூறி சாபத்தைக் கூறாமல் மறைத்துவிடுகின்றனர் தோழியர். உலகத்தைத் துறந்த கண்வரும் பெண் பிரிவால் வாடுகிறார். அரண்மனையில் துஷ்யந்தன் வீற்றிருக்கின்றான். "வண்டே! மாவின் இளந்தளிரிலுள்ள மரகந்தத்தை அவ்வாறு சுவைத்த நீ இன்று அதை முற்றிலும் மறந்து தாமரையையே குடிகொண்டுவிட்டாயே" என்று அரண்மனையின் கலாமண்டபத்திலிருந்து வரும் ஹம்ஸபதிகா, என்ற பெண்ணின் கீதம் அரசனைக் கலக்குகிறது. ஆனால் அவனால் காரணங் கண்டுகொள்ள முடியவில்லை. சகுந்தலையைப்பற்றிய விஷயத்தைத்தான் அவன் மறந்துவிட்டானே!.

கண்வரது ஆசிரமத்திலிருந்து சிஷ்யர்கள், ஒரு பெண்ணுடன் வந்திருப்பதாக அறிந்த அரசன், புரோகிதரைக்கொண்டு 'அவர்களை வரவேற்று க்ஷேமஸமாசாரத்தை விசாரிக்கின்றான். கண்வ முனிவரது

12ம் பக்கம் பார்க்க)

# பிரிட்டனில் பொது நூல் நிலையங்கள்

நாங்கள் படிக்க விரும்பும் சகலவிதமான புத்தகங்களையும் இலவசமாக பெற்று படிக்கும் சௌகரியம் பிரிட்டிஷ் மக்களுக்கு நூறு வருடங்களுக்கு முன்னாதான் முதன்முதலாக கிடைக்க ஆரம்பித்தது. 1850 வருடம் நிறைவேற்றப்பட்ட பொது நூல் நிலையங்கள் சட்டத்தின் கீழ்தான் 10000க்கு மதிகமான ஜனத்தொகை கொண்ட டவுன் கவுன்சில்கள் "இலவச" நூல் நிலைய சர்வீசை ஆரம்பிக்கத் தொடங்கின. இந்த நூல் நிலைய சர்வீஸ் இன்று பிரிட்டன் முழுவதும் சங்கிலிபோல் இணைந்து அபிவிருத்தி அடைந்துள்ளது.

12000000க்கு மதிகமான வாசகர்கள் வருடந்தோறும் இந்நூல் நிலையங்களிலிருந்து முப்பது கோடிக்குமதிகமான புத்தகங்களை வாங்கிச்சென்று படித்துவருகின்றனர். கிராமங்களில் வதியும் வாசகர்களுக்கு புத்தகங்கள் அவரவர் கிராமத்திற்கு அனுப்பப்படுகின்றன. பிரிட்டனின் நூல் நிலைய சர்வீசின் முன்னேற்றம் இத்துடன் மட்டும் நின்றுவிடவில்லை. பிரிட்டனின் பொது நூல்நிலையங்கள் புத்தகசாலைகளாகவும், அதே சமயத்தில் உபந்யாசங்கள், விவாதங்கள், நாடகம், சங்கீதம், பிலிம் முதலியவை நடைபெறும் ஸ்தலமாகவும் விளங்கி வருகின்றன. சுருங்கக்கூறின் பிரிட்டனிலுள்ள ஒவ்வொரு பொது நூல் நிலையமும் அந்தந்த ஜில்லாவின் அல்லது டவுனின் சமூக, கலாசார மையஸ்தலமாக வேலை செய்து வருகின்றன.

பிரிட்டன் முழுவதிலும் இன்று 23000 பொது நூல் நிலையங்கள் உள்ளன. அவைகளில் ஒன்றான லெய்டன் பொது நூல் நிலையத்தைப்பற்றிய புகைப்படங்கள்தான் இத்துடன் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. லெய்டனின் ஜனத்தொகை 10,60,00; இவர்களில் 20,000 நபர்கள் இந்நூல் நிலையத்தை தவறாது உபயோகித்து வருகின்றனர். இந்நூல் நிலையத்தில் குழந்தைகளுக்கென தனியாக பகுதியொன்றும் இருக்கிறது. இதைத்தவிர நாடக மேடை, பிலிம்புரொஜக்டர், திரை, 175 நபர்களுக்கான ஆசன வசதிகள் ஆகியவைகளுடன் கூடிய உபந்யாச மண்டபமொன்றும் உள்ளது.

பிரிட்டனின் பொது நூல் நிலைய சர்வீஸ் கடந்த நூறு வருடங்களில் அடைந்துள்ள முன்னேற்றமும், சர்வீசின் தரமும் 1850 வருடச் சட்டம் நிறைவேற்றியவர்கள் கனவிலும் நினைத்திராத ஒரு வெற்றியாகும். பிரிட்டனில் பொது நூல் நிலைய சர்வீஸ் இன்று உலகிலேயே இணையற்றதாக விளங்கி வருகிறது.



30 கோடி புத்தகங்களடங்கிய நூலகத்தின் ஒரு பகுதியை மட்டும் படத்தில் காண்கிறோம்.



நூல் நிலையத்திலிருந்து ஒரு குடும்பமே தங்களுக்குத் தேவையான புத்தகங்களைப் பெற்று படித்து இன்புறும் காட்சி.



வெறும் புத்தகங்களை மட்டும் சேர்க்காமல், சங்கீதம் கேட்கவும் வசதியான முறையில் இசைத்தட்டுகளை சேகரித்து வைத்து ஆனந்தப்படும் காட்சி.

# கோவில்களும் பழைய இலக்கியங்களும்

பேரூர் பட்டீசுவர சுவாமி தாம பங்குனி உத்திர திருவிழாவில் ஆ. கே. சண்முக செட்டியார் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்: மதம், கலை இவை சம்பந்தமாக கூட்டம் கூடுவது எப்போதும் பொருத்தமானதாகும்.

தமிழர் பண்பாட்டை கோவில்களில்தான் காணமுடியும். கோவில்கள் இல்லையானால் அப்பண்பாடு மறைந்தே போயிருக்கும்.

முப்பது வருஷங்களாக தமிழில் மறுமலர்ச்சி ஏற்பட்டுள்ளது. தமிழில் அழிந்ததுபோக கிடைத்துள்ள நூல்களைப்பார்த்தால் அதிலேயே பெரும் செல்வங்கள் உள்ளன.

மற்ற உலகமொழி இலக்கியங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால்தான் நமக்கு கிடைத்துள்ள செல்வங்கள் எவ்வளவு அரிய பொக்கிஷம் என்பது தெரியும்.

நம் நாட்டில் தமிழ் இலக்கியங்களைப் பழித்து அவைகள் வெறும் கட்டுக்கதைகள், மூடப்பழக்கம் கொண்டவை என்று கூறும் சிலரும் உண்டு. நல்லொழுக்கத்தைப் போதிக்க புராணமும் இலக்கியமும் எதற்காக என்று அவர்கள் கேட்கிறார்கள். ஆனால் நம் முன்னோர்கள் புராணம் இலக்கியம் ஆகியவை மூலம் நல்லொழுக்கம் போதிக்கும் வழியை ஏன் கடைப்பிடித்தார்கள் என்பது இப்பொழுது தெரியவந்தது.

பெரிய புராணம் சைவர்களின் தலைசிறந்த நூலாகும். வடநாட்டிலே நடராஜரை வணங்கும் வழக்கம் இல்லை. நாட்டியம் என்னும் சொல் வடமொழியிலிருந்து வந்ததல்ல. நடை என்னும் தமிழ்ச்சொல்லிலிருந்து வந்ததாகும். தமிழ்ப் பண்பை நாம் மறக்காமல் கைக்கொள்ளவேண்டும்.

## உணவு முனையில் யுத்தப் பிரகடனம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

2. விவசாயிகளிடையே அதிருப்தி நிலவியிருப்பதால், அவர்களிடையே உற்பத்திப் பெருக்க ஆர்வம் குறைந்துவிட்டது.

3. தேவைக்கதிகமான அளவுக்கு நிலம் உடையவர்களின் சுரண்டலும், அலட்சியமும் அதிகரித்துவிட்டது.

4. அரசியல் கட்சிகளின் போட்டா போட்டி விவசாயிகளிடையே ஒவ்வொரு கட்சியாரும் வேவ்வேறு கோஷங்களைப் போட்டு அவர்களிடையே கலவர உணர்ச்சியைப் பெருக்கி விட்டிருக்கிறார்கள்.

5. நிலச் சீர்திருத்தத்தைத் துரிதமாகச் சர்க்கார் செய்யாமல் இருக்கிறார்கள்.

6. பஞ்சப்படிக் கோரிக்கையும், ராணுவச் செலவும் போட்டியிடுவதால், விலையேற்றமும், சம்பள உயர்வும் கிளப்பிவிட்டன.

7. தானியவிலை நிர்ணயம், தானிய நடமாட்டக் கட்டுப்பாடுகள், சர்க்காரின் ஏகபோகக் கொள்முதல். தானியப் பங்கீடு, தானிய இறக்குமதி இவைகளில் சர்க்கார் கையாளும் உறுதியோ அல்லது திறமையோ இல்லாத கொள்கைகள்

8. உணவு தானியங்களை வீணாக்குவது போன்ற பழக்கங்களும் [illegible]

9. உணவு தானியங்களை பதுக்கிவைத்து அதிக விலைக்கு விற்கும் பேராசையும் ஏற்பட்டுவிட்டது.

10. உணவு உற்பத்திக்கு அவசியமான நல்ல விதை-உரம்-கிடைத்தாலும், கருவிகளின் பற்றாக்குறை 'கொள்ளை' விலை இவைகள் நிலைத்து விட்டன.

11. துண்டு துண்டாக நிலம் சிதறிக்கிடக்கிறது இது விரிவான உற்பத்திக்கும்-உற்பத்தி பெருக்கத்திற்கும் பெரியதடையாயிருக்கிறது.

இதையெல்லாம் தெரிந்து கொண்ட பின்னர், இதற்குப் பரிகாரம் என்ன என்று நாம் சிந்தித்தேயாக வேண்டும்.

உணவு உற்பத்தி-விநியோகத்தில் எந்தக்கட்டுப்பாடும் இருக்கக்கூடாது. இவைகளில் பூரண சுதந்திரம் நிலவினால்தான் உணவு பற்றாக்குறை இல்லாமலேயே போய்விடும் என்பது ஒரு அபிப்பிராயம்.

கட்டுப்பாடுகள் இல்லையென்றால், தானியங்களின் விலைகள் வாங்கவே முடியாத அளவுக்கு உயர்ந்துவிடும். எனவே, கட்டுப்பாடுகள் அவசியம். அவைகளை இன்னும் தீவிரமாகவும், திறமையாகவும் அமுல் செய்ய வேண்டும் என்பது இன்னொரு அபிப்பிராயம்.

அதிக தானிய உற்பத்திப் பிரதேசங்களில் தீவிர உணவுப் பங்கீட்டை அமுல் நடத்துவதன் மூலம் பூரணக் கொள்முதலைச் செய்து பற்றாக்குறைப் பிரதேசங்களுக்கு உணவு வினியோகம் செய்ய வேண்டுமென்பதும் பற்றாக்குறைப் பிரதேசங்களில் கட்டுப்பாடுகளைச் சிறிதளவு தளர்த்தவேண்டுமென்பதும் மற்றொரு அபிப்பிராயம்.

கட்டுப்பாடுகளை பூரணமாக நீக்கிவிடுவது என்பது இந்நிலையில் விஷப்பரிக்ஷையாகும். மக்களின் தேசீய ஒழுக்கமே சிதைந்து காட்ட இந்நாளில், 'காந்திஜி சொன்னார்' என்று பல்லவி பாடிக்கொண்டே சுரண்டுகின்ற கூட்டம் பெருகும் இந்நாளில், இந்த சர்க்கார் இந்த விஷப் பரிக்ஷையில் இறங்கவே கூடாது. ஆனால், கட்டுப்பாடுகளை சரியாகவும், நேர்மையாகவும் அமுல் நடத்த வேண்டுவதுதான் சர்க்காரின் முக்கியமான பொறுப்பாகும். அதோடு, நமது தேவைக்கேற்ப நமது நாட்டில் விளைச்சலைப் பெருக்கிக்கொள்வதில்தான், இந்த உணவுப்பிரச்னை தீரும். சாவியிருக்கிறது. விளைச்சலுக்கு லாயக்காக நிலங்களை மாற்றுவதும், உற்பத்தித் திறமையை [illegible] நமது உடன [illegible] வேலைகளாகும். இதைச் செய்வதற்குத் தடையாயிருக்கும் பல பொருளாதார-சமூக உரிமைகளையும், சட்டங்களையும் சர்க்கார் மாற்றியேயாகவேண்டும். விஷமத்திற்கும், அசிரத்தைக்கும் காரணமாயிருக்கும் பல காரணங்களை சர்க்கார் உணராவிட்டாலோ, அல்லது உணர விரும்பாமலோ இருந்துவிட்டால், உணவுப் பெருக்கம்-உற்பத்திப் பெருக்கம் என்ற பேச்செல்லாம் வெறும் பேச்சாகவே நின்றுவிடும். நிலமிருந்தும் அதில் தீவிரமாகவும், விவேகமாகவும் பாடுபடாமல் இருப்பவனையும், நிலத்தின் சொந்தக்காரன் என்பதற்காக மட்டும், எங்கேயோ ஏதோ சிறிது அல்லது பெரிய தொழில் செய்துகொண்டும், உத்தியோகம் பார்த்துக்கொண்டும் நில வருமானத்தை அடைய நினைப்பவனையும், சர்க்கார் கட்டுப்படுத்தாவிட்டால், நிலத்தின் வளம் அதிகரிக்கவே அதிகரிக்காது. தேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்து அந்த அதிக மிச்சத்தையும் அழித்து, மக்களின் தேவையைப் பயன்படுத்திக்கொண்டு விலை ஏற்றத்தைச் சிருஷ்டி செய்யும் முதலாளித்வ பித்தலாட்டத்தை நாம் இங்கே அனுமதிக்கவும் கூடாது; அதனால், விவசாயிகளின் கலவரப் போக்கையோ அல்லது அசிரத்தையையோ அனுமதிக்கவும் முடியாது. உணவுப் பிரச்னையை சமாளிக்கும்போது - விளையாட்டுக்கோ அல்லது வேதனைக்கோ இடமில்லாமல்-சர்க்கார் மிகக்கண்டிப்பான முறையிலும்-சாதுர்யமாகவும், நேர்மையாகவும் நடக்க வேண்டும்.

"கொடுமுடி"





பிரிட்டனில் ரத்த சேமிப்பு இயக்கத்தை மிகவும் ஒழுங்கான முறையில் நடத்தும் ஸ்தாபனம் ஒன்றில் தயாரிக்கப்படும் ரத்த மருந்துகள் அநேக உயிர்களுக்கு ஆபத்துக் காலத்தில் உதவக்கூடியதாக இருக்கிறது. அவைகளை பாட்டலில் அடைத்துள்ள காட்சிதான் மேலே புகைப்படத்தில் பார்ப்பது.




(ராஜம்மாள்)

சமயல் சாஸ்திரத்தைப் பற்றி ஒரு தொகுதி கட்டுரைகள் எழுதும்படி ஆசிரியர் எனக்கு ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிருர். பாகசாஸ்திரத்தைப்பற்றி ஒரு பெண்மணிதான் எழுதவேண்டும் என்று ஆசிரியர் ஏன் நினைக்கிருர் என்று எனக்குப் புரியவில்லை: பாகசாஸ்திரத்திற்கு இருப்பிடம் ஒரு ஆண் மகன். நளபாகம், என்று கேள்வி பட்டதில்லையா? ஆனல் ஆசிரியர் எதிர்பார்ப்பது நளபாகமாகிய பெரும்படி சமயலைப் பற்றி இருக்கதென்று நினைக்கிறேன். தினசரி குடும்பத்தில் செய்யக்கூடிய சமயல்களைப்பற்றி அவைகளின் முறைகளை தேவையான திருத்தங்களுடன் எதிர் பார்க்கிருர் என்று முடிவு செய்கிறேன்:

குடும்பச் சமயல் பெண்களின் பொறுப்பு. இது எப்படி இருந்தாலும் அதை சாப்பிடவேண்டியது ஆண்களின் பொறுப்பு. இந்த நீதிக்கு மாறுபாடு ஏற்பட்டால் குடும்பத்துக்குள் கலகம் போலீஸ்காரனை கூப்பிடு என்ற கதையாக ஆகிவிடும். (உம்) ஒரு குடும்பத்தில் ஸ்திரீக்கு தேக அசௌக்கியம் 2,3 நாட்கள் ஏற்பட்டு விடுகிறது என்று நினைத்துக்கொள்வோம். சமயல் வேலை உதவிக்கு வரக்கூடிய பெண் உறவினர்கள் ஒருவருமில்லை. ஆகையால் வெளி வேலையுடன் சமயல் சீட்டும் வீட்டு எஜமானனுக்கு. அந்த நளபாகம் அமுலிலிருக்கும் அந்த இரண்டு மூன்று நாளும் குடும்பத்தின் கோலத்தை பார்க்க வேண்டுமே! அடுப்பங்கரை ஓரேகுப்பைத்தொட்டி. சாமான் சர்ஜான்கள் திறந்தது திறந்தபடி, எண்ணெய் ஜாடிகள் அடியில் ஒழுக்கு எண்ணெயும் ஜாடிக்கு அபிஷேகமும் ஒருபுறம். ஒரு விசிறிக்கு உயிர் போயிருக்கும். ஒரு வாரத்திற்கு ரேஷனில் வாங்கிய கிரசிஞயில் காலியாயிருக்கும். குழந்தைகள் வெந்ததும் வேகாததுமாகத் தின்று அவர்களுக்கு ஜீரணமும் கெட்டுப்போயிருக்கும் நடுவில் அவைகள் குறுக்கும் நெடுக்கும் போய் உதைபடுவது வேறு. எஜமானியம்மாள் சீக்கிரம் லீவிலிருந்து அடுப்பங்கரைக்கு வந்தால் போச்சு. இல்லாவிட்டால் யுத்தகளம்தான். ஞாபக மறதியில் எஜமானர் இருப்பச்சட்டி காயும் பொழுது தொட்டு விடுவதும் குழம்பு, ரசங்களில் உப்பு, புளி, மிளகாய் திட்டம் தெரியாமல் போட்டுவிடுவதும் நளபாகத்தின் நிகழ்ச்சிகளாகும்.

பெண்பிள்ளை என்ருல் வயது வந்தவுடன் அடுப்பங்கரை என்று, சிருஷ்டி கர்த்தா சிருஷ்டிக்கும் போதே தலையில் எழுதி விடுகிருர். ஆகையால் சுசி, ருசியான சமையல் எப்படி வராமல் போகும்? குடும்பங்களில் சமயல் எனருல் சுசி, ருசி தன்ஞல் ஏற்படும். பஞ்சபக்ஷ பரமானங்களைப் பற்றியும் அறுசுவை உண்டிகளைப் பற்றியும் இந்த தொகுதியில் எழுதப் போவதில்லை. குடும்ப சமயலில் சுசி, ருசியாக இருப்பதை அழகுக்கு அழகு செய்வதைப்போல் மேலும் ருசியாக எப்படிச்செய்யலாம் என்பதைப் பற்றித்தான் இந்த தொகுதியில் எழுதலாமென்று இருக்கிறேன். ருசியை மேலும் ருசியாக்குவதை அழகுக்கு அழகு செய்வதற்கு ஒப்பிட்டுச் சொன்னேன், எப்படி என்று பார்க்கலாம். ஒரு அழகான புடவையை ஒரு குரூபி உடுத்திக் கொண்டு போவதைப் பார்த்தால் எப்படியிருக்கிறது? ஏர்வையாக யிருக்காது! அந்தப் புடவை சேரவேண்டிய யிடத்தில் சேர்ந்தால்தான் ஏர்வையாக யிருக்கும். ஒரு சௌந்தர்யவதி அதைக்கட்டிக் கொண்டு நடப்பது அழகுக்கு அழகு செய்யும் காட்சியாக யிருக்கும் ஏர்வையாக யிருக்கும். அதுபோல சமயல் திட்டங்களிலும் ஏர்வை என்கிற அம்சம் அவசியமானது இதைப்பற்றி அடுத்த கட்டுரையில் பிரஸ்தாபிக்கிறேன்.







## வைத்திய ஆராய்ச்சிக்கான புது நிலையம்

வரும் மே மாத வாக்கில் பிரிட்டனில் வைத்திய ஆராய்ச்சிக்கென புது நிலையமொன்று திறக்கப்படவிருக்கிறது. இந்நிலையம் உலகிலுள்ள முதல்தரமான நிலையங்களுள் ஒன்ருக திகழுமென கூறப்படுகிறது. ரேடியோ-ஆக்டிவ் ஐஸடோப்புகள் பற்றிய ஆராய்ச்சிகள் நடத்துவதற்கேற்ப இந்நிலையம் கட்டப்பட்டுவருகிறது. ஆகவே இந்த நிலையம் பிரிட்டிஷ் வைத்திய ஆராச்சிக் கழகத்திற்கு மிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்துவரும். பிரிட்டனிலுள்ள பிரபல வைத்திய நிபுணர்களில் ஒருவரான ஸர் சார்லஸ் ஹாரிங்டன் அவர்கள்தான் இக்கழகத்தின் டைரக்டர்.

# காளிதாஸனின் சாகுந்தலம்

(8-ம்பக்கத் தொடர்ச்சி)

யன். அரசனுக்கு ஒன்றுமே நினைப்பு வரவில்லை. முனிவர்கள் பொய்பேச மாட்டார்களென்ற நம்பிக்கையிருந்த போதிலும், தனக்கு அறிமுகமற்ற பெண்ணை எப்படி மனைவி என்று ஏற்பது? சகுந்தலை தனிமையில் நடந்த சம்பாஷணையை நினைப்பூட்டுகின்றாள் பயனில்லை. பிரியம்வதை கூறியது நினைவிற்கு வருகிறது. அரசனது மோதிரத்தைக் காண்பிப்பதாகக் கூறி கையைப் பார்க்கையில் மோதிரம் கையில் காணப்படவில்லை. வரும் பாதையில் ஆற்றில் இறங்கியிருந்தபொழுது நழுவியிருக்கலாமென ஊகிக்கின்றனர். எப்படியிருந்தாலென்ன, அரசனுக்கு நினைப்பு வரவில்லை, சகுந்தலையை அங்கே விடுத்து முனிவர்கள் ஆசிரமத்திற்கு திரும்பிவிடுகின்றனர். அரசனும் ஏற்க மறுக்கிறான். இந்நிலையில் பூர்ண கர்ப்பவதியான சகுந்தலை பெரிதும் வருந்துவதைக்கண்டு, புரோகிதர் அவளது பிரசவகாலம் வரை தன் வீட்டில் வைத்திருப்பதாகக்கூறி அழைத்துச் செல்லுகிறார். ஆனால் வழியில் ஒரு ஜோதி தோன்றி சகுந்தலையை எடுத்து மறைகிறது. இதைக் கேள்வியுற்ற அரசன் அதிகமாகப் பொருட்படுத்தவில்லை. காவற்காரரிடம் ஒரு மோதிரத்துடன் ஒரு செம்படவன் சிக்குகிறான். அரசாங்க முத்திரையுடன் கூடிய அம்மோதிரத்தை அவனிடமிருந்து போலீசார் கைப்பற்றி அரசனிடம் அளிக்கின்றனர்! சக்ராவதாரத்தில் பிடிபட்ட மீனின் வயிற்றிலிருந்து அம்மோதிரம் கிடைத்த தகவலையும் தெரிவிக்கின்றனர். மோதிரத்தை கண்டவுடன் அரசன் சாபம் நீங்கியவனாக சகுந்தலையின் நினைவால் பெரிதும் வருந்துகின்றான். நாட்டில் விழா நிறுத்தப்படுகிறது. அரசனது வருத்தத்தில் நாடு முழுமையும் பங்கெடுத்துக்கொள்கிறது. விதூஷகனிடம் தன் துயரத்தை தெரிவித்து. சகுந்தலையின் படத்தை வைத்துக்கொண்டு புலம்புகிறான் அரசன். இதைக்கண்ட ஸானுமதி என்ற ஒரு தேவப் பெண் இவ்விஷயத்தை சகுந்தலைக்கு அறிவித்து ஆறுதல் கூறுகிறாள். ஸந்ததியற்ற ஒரு கப்பல் வியாபாரியின் சொத்து அரசாங்கத்திற்கு சேரவேண்டியது பற்றிய பிரச்னை அரசன்முன் வரவே, தானும்ஸந்ததியற்று தவிக்கப்போகிறோமே? மூதாதையர் வருந்துவரே என்று புலம்புகிறான். தேவையுள்ளவர்கட்கெல்லாம் நியாயமான முறையிலுள்ள பந்துவாகத்தானிருப்பதாகப் பறைசாற்றச் செய்கிறான் அரசன். சகுந்தலை அப்பொழுதாவது மீண்டும் தன்முன் வரமாட்டாளா? என்ற நோக்கத்துடனேயே இந்த ஏற்பாட்டைச் செய்கின்றான். தான் பூர்ண கர்ப்பவதியான சகுந்தலையை மறுத்தனுப்பியதை நினைத்து மூர்ச்சையடைகிறான். உயரமான அரண்மனையின் உப்பரிகையில் அமர்ந்திருந்த விதூஷகனை ஒரு சக்தி தாக்குகிறது. அவன் அலறுகிறான். இந்த அலறல் அரசனது மூர்ச்சையைத் தெளிய வைக்கின்றது. அரசன் விரைகின்றான் அவ்விடத்திற்கு இந்திரனின் தேரோட்டியான மாதலி அங்கு வணங்கி நின்று, தானே தாக்கியதாகவும், அரசனது கலக்கத்தை மாற்றவே இவ்வாறு செய்ததாகவும், மன்னிக்குமாறும் கூறி, போரில் உதவ இந்திரன் அழைப்பதாகத் தெரிவித்து அழைத்துச் செல்லுகிறான்—போரில் துர்ஜயனைத் தோர்க்கச்செய்து இந்திரனுக்கு வெற்றி கிட்டுமாறு செய்கின்றான் துஷ்யந்தன். இம் மகிழ்ச்சியுடன் பூமிக்குத்திரும்புகின்றான். வரும் பாதையில் மரீச முனிவரது ஆசிரமத்தருகில் ரதத்தை நிறுத்தி அன்னாரைவணங்கச்செல்கின்றான். அங்கு அரச லக்ஷணங்களுடன் கூடிய ஒரு தாபஸச் சிறுவன் சிங்கக் குட்டியுடன் விளையாடுகிறான், அதன் பற்களை எண்ணுவதில் முனைகிறானவன். தாய்ச் சிங்கம் தாவிக்குதிக்கின்றது பையனை நோக்கி. பையன் இருதவப் பெண்கள் தடுப்பதையும் பொருட்படுத்தவில்லை. அரசனுக்கு அச்சிறுவனைக் கண்டதும் புத்திரவாத்ஸல்ய மேற்படுகிறது. கர்ப்பவதியான சகுந்தலைக்குக் குழந்தை பிறந்திருந்தால் இந்தனைவயதானகியிருக்குமென்றும் நினைக்கிறான்க்ஷத்திரியச்சிறுவனென்பதையும், மனைவியை மறுத்த பாவியான தந்தையின் புதல்வனென்பதையும், சகுந்தலை என்பது அவனது தாயின் பெயரென்பதை தவப்பெண்கள் வாயிலாக அவன் அறிந்தபோதிலும் தன் அதிஷ்டத்தில் அவனுக்கு நம்பிக்கையில்லை. ஆனால், சிறுவனது கையில் கட்டப்பட்ட 'ரக்ஷை' கீழே விழுந்தபொழுது அதை அரசன் எடுத்தும் அது பாம்பாக மாறாததால், தவப்பெண் வியப்புற்று சகுந்தலையிடம் தெரிவிக்க, சகுந்தலை தவக்கோலத்தில் அரசன்முன் தோன்றுகிறாள். தேடித்திரிந்த புதையல், கையில் விழுந்து நழுவிய கனி கிட்டியது மீண்டும. அரசன் தான் செய்த தவறுக்கு மன்னிப்புக்கோறி ஏதோ தன் மனதை மறைத்துவிட்டதென்கிறான். தன் விதியின் செயலென சகுந்தலை ஆறுதல் அடைகிறாள். சகுந்தலையின் கண்ணீரை துடைத்த பொழுது அரசன் கையில் அந்த மோதிரத்தைக்கண்டு இதுதான் அந்த மோதிரம் என்று தன் நேர்மை நினைவூட்டுகிறாள். மாரீசரும், அதிதியும் அவர்களை ஆசீர்வதித்து துர்வாஸரது சாபத்தினாலேற்பட்ட விளைவுகளையும் விளக்குகின்றனர். பரதன் நீடூழி வாழ வேண்டுமென்றும் ஆசீர்வதிக்கின்றனர். இதுதான் காளிதாஸனின் சாகுந்தலம்.

ஐந்தாவது வேதம் என்று போற்றப்பட்ட மகாபாரதத்திலிருந்து எடுக்கப்பட்ட சகுந்தலோபாக்யானக் கதை இவ்வாறு அழகியநாடகமாகிறது. இந்த நாடகத்தின் ஜீவநாடியாக நிற்கின்றது மோதிரம். இதனால்தான் இதற்கு 'அபிக்ஞான சாகுந்தளம்' என்று பெயர் விளங்குகிறது. இதில் 7. அங்கங்கள் உள. சிருங்கார ரஸம் தலைதூக்கி நின்று மற்றரஸங்களுக்கும் சந்தர்ப்பமளிக்கின்றது.

'தீரோதாத்தன்' என்ற உயர் வகையைச் சார்ந்த மன்னன் கதாநாயகன்—விண்ணும் மண்ணும்கூடிப் பெற்ற அருங்கனியான சகுந்தலை இதன் கதாநாயகி. முதல் மூன்று அங்கங்களில் சகுந்தலையும், கடைசி மூன்று அங்கங்களில் அரசனும் முக்யத்துவம் பெறுகின்றனர். இடையேயுள்ள 4 வது அங்கம், நடுநாயமாக விளங்கிச் சிறப்பூட்டுகிறது என்று இது பாராட்டப்படுகிறது. இதில் வரும் கதாபாத்திரங்கள் ஜீவகளையுடன் விளங்குகின்றன.

மனச்சாட்சியில் நம்பிக்கையையும், வாழ்வில் நேர்மையையும், முனிவரிடத்தில் மரியாதையும்பகைவரை ஒழிப்பதில் வீரமும் கொண்டவனாக அரசன் விளங்குகிறான்.

காட்டில் மானுடன் மானாக வாழ்ந்த சகுந்தலையின் வெள்ளை உள்ளம், காதலுக்குப் பலியாகிப் பின் தோல்வியுற்று இறுதியில் வெற்றி பெறுவது தத்ரூபமாக சித்தரிக்கப்பட்டுள்ளது.

கண்வ முனிவர், மரீச முனிவர் ஆகியோர் சிறந்த தபோதனர்களாயினும் உலக விஷயங்களையும் நன்குணர்ந்து உபதேசிப்பது குறிப்பிடத்தக்கது.

விதூஷகன், மாதலி, செம்படவன், போலீஸ்காரர்கள், அனைவருமே தம் கதாபாத்திரத்திற்கேற்றவாறு விளங்குகின்றனர்.

பிரியம்வதை சற்று வயதில் பெரியவள். அறிவிற் சிறந்தவள். கிண்டலாக பேசுவதிலும் கைக்காரி.

அனசூயை வெகுளி.

ஆரம்பம்முதல் கடைசிவரை இடம் பெறும் இயற்கை காக்ஷிகள் பல. உவமைகள் எண்ணற்றவை. சொல் நயமும், பொருட்செறிவும்கொண்ட இந்நாடகம் உலகின் பொக்கிஷம். பாரதவர்ஷத்தின் புதையல்.





## நோட்டீஸ்.

**கரூர். டி. மு. கோர்ட்டு**

O. P. 11/50.

1. சொர்ணம்மாள். மைனர் தேசராஜ் 2 By Next friend தாயார் சொர்ணம்மாள் —மனுதார்கள்.

ஷை நம்பரில் இறந்துபோன கொமரசாமி பிள்ளைக்கு மனுதார்கள் வார்சுகள் என்று கோறி சர்டிபிகேட் பெற மனுக் கொடுத்து 12-4-50ல் வாய்தா போடப்பட்டிருப்பதால் ஆக்ஷேபணையிருந்தால் ஷை தேதியில் தெரிவித்துக்கொள்ளவும்.

(Sd) A. V. சந்திரசேகரன்,

கரூர் 28-3-50. | மனுதார்கள் வக்கீல்.

**திருச்சி டிஸ்டிரிக்ட் கோர்ட்டு**

.O P. 27 | 50.

அத்வைதாநந்தஸ்வாமிகள் ஆதீன கர்த்தா ஸ்ரீ குண்றிமணி ஸ்வாமி மடம், தஞ்சாவூர் குளத்தெரு; திருச்சிராப்பள்ளி கோட்டை —மனுதார்.

நோட்டிஸ்

ஷை மனுதாரால் ஷண்முகாநந்த ஸ்வாமிகள் எஸ்டேட்டுக்கு வரவேண்டிய கரூர் வைஸ்யா பாங்கிலுள்ள ரூ. 286 துகையை வசூலிக்க வேணுமாய் கொடுத்திருக்கும் மனு 12—4—50ல் ஷை கோர்ட்டில் விசாரணைக்கு வருவதால் அதற்கு ஆக்ஷேபனையுள்ளவர்கள் அன்று ஆஜராகித் தெரிவித்துக்கொள்ளலாம்.

(Sd) M. கோபால் பிள்ளை,

திருச்சி, 28-3-50. | அட்வகேட்.

## நோட்டீஸ்.

**திருச்சி ஜில்லா கோர்ட்டில்**

O. P. No. 35/1950.

திருச்சி சின்ன கம்மாளத்தெருவு H. K. Chugh குமாரர்கள் பகவான் தாஸ் ஹரிதாஸ் மல்சுக் 1. விருமல் ஹரிதாஸ் மல்சுக் 2. —மனுதார்கள்.

ஷை மனுதார்கள் இறந்துபோன H. K. Chugh debts and securities விஷ்யமாய் பாத்ய சர்டிபிகேட் பெற கொடுத்துயிருக்கும் மனு ஷை கோர்ட்டில் விசாரணைக்கு 5—4—1950 தேதில் போடப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனையுள்ளவர்கள் கோர்ட்டில் நேரில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

(Sd) K. Jamal Mohamed,

திருச்சி, 29-3-50. | Advocate.



Edited, Printed and Published by Thiruloka-Sitharam, at the Hanuman Press, Samaspiran Street, Tiruchirapalli.